# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை



சிலம்பு-௫௯] வள்ளுவா ஆண்டு-௨௦௧௩, வைகாசி June '82 [பரல்-௧௦

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருசு | திருவள்ளுவர் ஆண்டு உ௦கரு, வைகாசி சூன் 1982 | பரல் க௦ |
|---|---|---|

# சென்னை மறைமலை கலைக்கோயில் முதல் செங்கைக் கழுக்குன்றம் வரை

## (சிவநெறிச் செந்தமிழ்ப் பயண அமைப்பு)

இவ்விருபதாம் நூற்றாண்டின் ஈடிணையற்ற புலவர்களுள் ஒருவராய்த் திகழ்ந்தவர் மறைத்திரு மறைமலையடிகளார் ஆவர். தமிழுக்கு அவர் ஆற்றிய தொண்டு தனிச்சிறப்பு வாய்ந்தது. தனித்தமிழ் இயக்கத்தின் தானைத் தலைவர் அவர். அவர் அன்று அவ்வியக்கத்தைத் தொடங்கியிராவிடில் இன்று வழங்கும் தமிழ் பிறமொழிச் சொற்கள் பெருமளவில் கலந்து இயல்பான தமிழ் என்பது என்னவென்று தெரியாது போயிருக்கும்.

இத்தகைய பேரறிஞரின் நினைவுக் குறிகளாகச் சென்னை மாநகரிலும் செங்கற்பட்டு மாவட்டத்திலுமாக அமைந்துள்ள நிலையங்கள் தமிழுணர்வுடையோரால் போற்றப்பெற வேண்டியவை. சென்னை மாநகரில் இலிங்கிச் செட்டித் தெருவிலுள்ள மல்லிகேசுவரர் திருக்கோயிலை யடுத்து அமைந்துள்ள மறைமலையடிகள் நூல்நிலையக் கலைக்கோயிலிலிருந்து செங்கை மாவட்டத்திலுள்ள திருக்கழுக்குன்றம் வரை அடிகளார் தொடர்புடைய அமைப்புகள் சில உள்ளன

தமிழ்ப் பணியாற்றுவதற்காகத் தமிழகத்தின் தலைநகருக்குப் போந்த அடிகளார் அவ்வப்போது வழிபட்டு வந்தது மல்லிகேசுவரர் திருக்கோயிலாகும். அக்கோயிலை ஒட்டி அமைந்துள்ளது தமிழ் ஆராய்ச்சியாளர்களின் கருவூலமாகத் திகழும் 'மறைமலை

யடிகள் நூல்நிலையம்'. அடிகளார் தம் ஆய்வுக்கெனத் தொகுத்து வைத்த அரிய நூல்களைத் தன்னகத்தே கொண்ட இந் நூல் நிலையம் அமைந்துள்ள கட்டிடம் வரலாற்றுச் சிறப்புடைய கட்டிடமாகும். வள்ளலாரின் சமரசக் கொள்கையில் ஈடுபட்டு அதனைப் பரப்புதற்காகப் பொதுநிலைக் கழகம் ஒன்றை நிறுவி நடாத்திய அடிகளாரின் பெயரில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நடத்தி வரும் இந்நூலகம் அவ் வள்ளற் பெருமான் 1832ஆம் ஆண்டில் தம் ஒன்பதாவது அகவையில் முதன்முதல் வாய் திறந்து சமயப் பேருரை நிகழ்த்திய வரலாற்றுச் சிறப்புடைய கட்டிடத்தில் அமைந்துள்ளது வியந்து போற்றுதற்குரியது.

இதே தெருவின் தென்கோடியில் அடிகளார் பணியாற்றிய கிறித்தவக் கல்லூரியின் பழைய கட்டிடம் அப்படியே இன்றும் உள்ளது. கல்லூரியும் பள்ளியும் முறையே தாம்பரத்திற்கும் சேத்துப்பட்டிற்கும் மாறிவிட்டமையால் இன்று அக் கட்டிடத்தில் வணிக நிறுவனமொன்று செயல்பட்டு வருகிறது. இத் தெருவுக்கு நேர்எதிரில் உயர்நீதி மன்ற வளாகத்தில் அக் கல்லூரியின் புகழ்பெற்ற முதல்வராகத் திகழ்ந்த டாக்டர் மில்லர் துரைமகனாரின் உருவச்சிலை உள்ளது. வடகிழக்கு முனையில் இராஜாஜி அவர்களின் உருவச் சிலை அமைந்திருக்கிறது.

பாரிமுனையை விட்டுத் தெற்குநோக்கிப் பல்லாவரம் செல்லும் மலைச்சாலை வழியில் காமராசர், தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி ஆகியோரின் உருவச் சிலைகள் பாவாணர் மாவட்ட நூலகம் சைதையில் மறைமலையடிகளார் பாலம் ஆகியவை அமைந்துள்ளன. 'மர்மலாங் பாலம்' எனத் திகழ்ந்ததை டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் 'மறைமலையடிகளார் பாலம்' என மிகப் பெரிய அளவில் மாற்றியமைத்தார்கள். இப் பாலத்தின் தொடக்கத்தில் அடிகளாரின் மார்பளவுச் சிலையொன்று அமைந்திருப்பின் மிகப் பொருத்தமாயிருக்கும்.

சைதையிலிருந்து தெற்கே சென்றால் தாம்பரம் போகும் பெருவழியில் பல்லாவரத்தில் 'தமிழக அரசின் மறைமலையடிகளார் அரசு மேனிலைப்பள்ளி' உள்ளது. அப் பள்ளியின் பின்புறமுள்ள சாவடித்தெருவில் அடிகளார் வாழ்ந்த வளமனை இன்று கலை மன்றமாகத் திகழ்கிறது. தம் இலக்கியப் பணி இடையறாது நடைபெற அமைதியான சூழலை நாடி அடிகளார் பல்லாவரத்தில் குடியேறினார்கள். தாம் வசதியுடன் வாழ அழகிய வளமனையையும் அமைத்தார்கள். ஏறத்தாழ 40 ஆண்டுகள் அதில் குடியிருந்தார்கள். அவர் வழிபட்டு வந்த அம்மையம்பலவாணர் திருவுரு

இன்றும் வழிபாடு செய்யப்பெற்று வருகின்றது. அடிகளாரின் பல்வேறு நிலைத் திருவுருவப் படங்கள் முகப்பில் அமைந்திருப்ப துடன் நானூற்றுக்கு மேற்பட்ட தமிழ்ப்புலவர் பெருமக்களின் திருவுருவப்படங்களுடன் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணு ஆகியோர் உருவப்படங்களும் கலைமன்றத்தில் கொலு வீற்றிருக் கின்றன. இதனை ஏற்று நடத்திவரும் சைவசித்தாந்த நூற் பதிப்புக்கழகம் தமிழக அரசின் பொருளுதவி பெற்று இதனை இன்னும் செம்மையாக நடத்த விழைகிறது.

கலைமன்றத்திலிருந்து செங்கற்பட்டு செல்லும் வழியில் புதிதாக உருவாகிவரும் புறநகர் 'மறைமலை நகர்' ஆகும். காட்டாங்குளத்தூர் அருகில் அமைந்துள்ள இப் புறநகர் டாக்டர் கலைஞர் மு. கருணுநிதி அவர்களின் காலத்தில் திட்டமிடப்பெற்ற தாகும். சென்னை மாநகரில் வாழ்வோரின் தொகை பெருகி வரும் நிலையில் அதையொட்டிப் புறநகர்களை உருவாக்கத் திட்டமிட்டு முதற்கண் அமையும் நகருக்கு அவர் அடிகளார் நினைவாக 'மறைமலை நகர்' என்ற பெயரிட்டார். இன்னும் பத்தாண்டுகளில் இந்நகர் நல்ல வகையில் உருவாகி அடிகளாரின் புகழை என் றென்றும் நிலைநிறுத்திக்கொண்டிருக்கும்.

மறைமலை நகரிலிருந்து தெற்கே சென்ருல் அடிகளாரின் பெயர் 'வேதாசலம்' என்று அமையக் காரணமாக இருந்த 'வேத புரீசுவரர்' எழுந்தருளியுள்ள திருக்கழுக்குன்றத்தை யடையலாம். அடிகளாரின் பெற்ருேர் நாகையைச் சார்ந்தவராயினும் ஆண் மகவில்லையே என்ற குறையைப் போக்கத் திருக்கழுக்குன்றத்தில் எழுந்தருளியுள்ள வேதபுரீசுவரரை வழிபட்டு அடிகளாரைப் பெற்றனர். அதன் நினைவாக 'வேதாசலம்' என்று பெயர் சூட்ட, அடிகளார் தாம் கொண்ட தனித்தமிழ்க் கொள்கையின் காரணமாக அதனை 'மறைமலை' என்று மாற்றியமைத்துக்கொண்டார். அடிகளார் நினைவுச் சின்னங்களான இவை சங்கிலித் தொடர்போல அமைந் துள்ளமை நினைந்து போற்றற்குரியது. அடிகளார்பால் ஈடுபாடு கொண்டோர் 'சென்னை மறைமலை கலைக்கோயில் முதல் செங்கைக் கழுக்குன்றம் வரை' ஆண்டுக்கொருமுறை பயணம் மேற்கொண்டு அடிகளாரின் கொள்கைகளைப் பரப்பலாம்.

சிவநெறிச் செந்தமிழ் மக்கள் வழிநடைப் பயணம் அல்லது பேருந்துப் பயணம் ஆண்டுக்கொருமுறை நடைபெற வேண்டு மென்பதே கழக ஆட்சியாளரின் உளத்தெழும் பெருவேட்கை யாகும்.

———

# 'சுரம் – ஜுரம் – சுரம்'

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

(முன் இதழ் ௩௬௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

'சுர்' என்பது ஓர் ஒலிக்குறிப்பு எனக் கண்டோம். அது, வெப்ப மிக்க ஒரு பொருளில், ஒரு குளிர்பொருள் படுங்கால் எழும்பும் ஒலியாம். உலைக்களத்தில் வெந்து செந்தீ வண்ணத்தில் காணும் இரும்பின்மேல் நீரைத் தெளித்த அளவில் 'சுர்' என்று ஒலிகிளம்புதல் நாம் கேட்டதன்றோ!

காய்ந்த தோசைக் கல்லில், தோசைமாவை ஊற்றிய அளவில் 'சுர்' என்று ஒலி கிளம்புதல் செவியுடையோரெல்லாம் செவ்விதிற் கேட்டதேயாம். அதே தோசையின் ஒருப்பக்கம் வெந்த அளவில் மறுபக்கம் வேதற்காகத் திருப்பிக் கல்லில் போடுங்கால் மீண்டும் ஒரு 'சுர்' ஒலி கேட்டலும் உண்மையே. இவ்வாறு இருகால் 'சுர்' என ஒலித்தல், புனைவு வேட்கையர்க்கு ஒரு சொல் விளையாட்டு ஆயிற்று.

தோசை என்பதை 'தோ' என்றும் 'சை' என்றும் பிரித்து 'தோ - இரண்டு; சை - (சொய்) ஒலி; எனப் பொருள் கண்டு, காணாத ஒன்றைக் கண்டவர் போல் களித்துத் தம் கண்டுபிடிப்புக்குத் தம்மைத் தாமே பாராட்டிக் கொள்ளவும் ஆயினர்.

தோய்ந்த (புளித்த) மாவால் செய்யப்பெறுதலால் 'தோயை,' 'தோசை' என ஆயிற்று என்று இற்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே மொழிஞாயிறு பாவாணர் அறுதியிட்டுரைத்தும் இன்றும் 'பொருந்தப் புளுகுவார்' புனைவு நிகழ்ந்துகொண்டுதான் உள்ளது!

சுர் என்னும் ஒலிக்குறிப்புச் சொல், வெப்பத்தை உணர்த்துவதாய் அமைந்தது. அதனுடன் 'அம்' என்னும் ஈறு சேர்ந்து 'சுரம்' என்றாகியது. சுரம் என்பதன் போலியாகச் 'சுரன்' என்றும் திரிந்தது. இந்நிலையிலேதான் சுரமும் சுரனும் பாலை நிலத்தையும், பாலைநில வழியையும் குறித்தன. பின்னை மற்றை வழியையும் குறிக்கலாயின.

சுரம் சுரன் என்பன தொல்காப்பியத்திலும் பாட்டு தொகை நூல்களிலும் பயின்று வருதலால் அதன் பழமையும் பலுக்கமும் நன்கு வெளிப்படும். இதனை முன்னரே அறிந்தோம்.

சுரம் என்பது ஆண்பாலுக்குரிய அன் விகுதி பெற்றும் சுரன் என ஆகும். அஃறிணைப் பொருள்களையும் அவற்றுள்ளும் உயிரில் பொருள்களையும் பால்நிலைப்படுத்தி யுரைக்கும் வழக் காறும் பண்டு தொட்டே உண்டு. 'நிலமகள்' என்பதும் 'கதிரோன்' என்பதும் இத்தகைய பால்வகுப்பில் அமைந்தனவே. இவைபோல் 'சுரன்' என்பதும் கதிரோன் என்னும் பொருள் தருவதாக இலக்கிய வழக்குப் பெற்றது. கதிரவன் வெய்யவன் தானே! வெப்பத்தின் மூலவன் தானே! ஆகலின் 'சுரன்' என்னும் பெயர் அதற்குத் தந்தது மிகப் பொருந்துவதேயாம்.

மலையைக் குடைந்தோ வன்னிலத்தை உட்குடைந்தோ அமைக்கப்பெறும் குடைவு வழி சுரங்கம் எனப்பெறும். கோலார் தங்கச் சுரங்கமும், பேரியாற்று மலைக்குடைவும் கருதத் தக்கன. சுரங்கம் என்பது சுருங்கை எனவும் வழங்கும். மனோன்மணீயத்து வரும் சுருங்கை தனிப் பேரிலக்கியச் சிறப்புப் பெற்றது. இக்கதையும் ஆங்கில இலக்கியத் தழுவலாகலின் சுருங்கை மேலை நாட்டவர்க்கும் உரியதே. இதுகால், சுருங்கை வழியிலேயே தொடர்வண்டி செல்லும் அளவு வளர்ச்சி மிக்க நாடுகள் திட்டமிட்டு நடத்துதல் உலகறிந்த செய்தி. இச் சுரங்க மும், சுருங்கையும் சுரத்தின் வழியாகப் பெற்ற பெயர்களே. உள்வெதுப்பம் உடையவை அவையாகலின் என்க.

நிலத்தின் உள்ளிருந்துவரும் நீர் வெதுப்பமாக இருக்கும். ஊற்றுநீர் வெதுவெதுப்பாக இருத்தல் எவரும் அறிந்தது. சுரந்து வரும் பால் வெப்பமாக இருத்தல் கறக்கும் கலத்தைத் தொட்ட அளவானே உணரக்கூடியதே. ஆகலின் சுரப்பு, சுரத்தல், சுரதம், சுரப்பி, சுரபி என்பவையெல்லாம் வெப்பத்தை அடிப்பொருளாகக் கொண்டு பிறந்த சொற்களேயாம்.

சுரம் என்பது கள்ளுக்கு வழங்கும் பெயர்களுள் ஒன்று. 'சுரபானம்' என்று இரு பிறப்பியாய் மதுவை வழங்குவதும் அதன் வழிவந்ததே. தென்னை, பனை இவற்றின் பாளையைச் சீவி வழிதலின்-சுரந்து வருதலின் சுரம் எனப் பெயர் பெற்றது. அன்றியும் உள்வெதுப்பை உண்டாக்கி உவகையூட்டும் என்றும் அதன் சுவை கண்டோர் களித்தனர்; வெறியும் கொண்டனர்; களிப்புக்கு இடமானதால் களி என்றும் வெறியூட்டுவதால் வெறி என்றும் விருப்பத்தைத் தூண்டுவதால் 'மது' என்றும் பெயர் பெற்ற குடி, வெப்பமூட்டுவதால் 'சுரம்' என்று காரணப் பெயர் பெற்றதே.

மது உண்டாக்கும்—அதிலும், நாட்பட்டுப் புளித்த மது உண்டாக்கும்—வெப்பத்தை உவமை வகையால் சொல்ல விரும்பிய புலவர் ஒருவர்,

"தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்" (புறம். 392)

என்றார். தேட்கடி எப்படி ஏறுமோ அப்படி ஏறுகிறதாம் நாட்பட்ட மது! தேட்கடியினும் பாம்புக்கடி மிக்க துடிப்புடையதாயிற்றே? அதுபோல்வது என்று புலவர்கள் கண்டனர். அதனால், 'பாப்புக் கடுப்பன்ன தோப்பி' (அகம். 348) என்றார் ஒருவர்.

படமெடுத் தாடும் பாம்புபோல் எழும்புகிறதாம் மது. அதனைப், 'பாம்பு வெகுண்டன்ன தேறல்' (சிறுபாண். 237), 'அரவு வெகுண்டன்ன தேறல்' (புறம். 376) என்றனர். உள்ளே உண்டாக்கப் பெறும் வெதுவெதுப்பு மாந்தருக்கு இன்பத்தை உண்டாக்குவதால்தான்போலும் ஆசிரியர் தொல்காப்பியனார் 'வெம்மை வேண்டல்' என்றார். குளிர் நாட்டுக்கு எந்நாளும் வெம்மை, வேண்டலாக இருப்பது கண்கூடு. சமனிலைப் பருவ வாய்ப்புடைய தமிழகத்திலும், மழைப்பருவம் பனிப்பருவங்களில் கதகதப்பைத் தேடாதவர் உளரோ? வெதுவெதுப்பும் கதகதப்பும் ஒத்த பொருளன அல்லவோ!

வெப்பத்தால் உண்டாகும் சிலந்திக் கட்டியைச் 'சுரமதி' என்றும், செந்தீக் கரப்பான் என்னும் படரைச் 'சுரமலி', 'சுரமலிகம்' என்றும் மருத்துவ நூலோர் கூறுவது இவ்விடத்தே அறியத் தக்கதாம்.

பாலை நிலத்திற்கு உரிய பாலைமரத்தினைச் 'சுரலிகை' என்பதும், மருதநிலப் புன்னையின் வேரும் காட்டுப் புன்னையைச் 'சுரபுன்னை' என்பதும், வெப்பத்தை வரையிட்டு அளந்துகாட்டும் கருவியைச் 'சுரமானி' என்பதும் வழக்காறுமாறு வழிமுறைச் சொற்களேயாம்.

சுர் என்பது இகர ஈறுபெற்றுச் 'சுரி' என்றாகும். சுரி என்பதில் இருந்து தோன்றும் சொற்கள் பலவாம். விளக்கினைத் தொட்ட குழந்தை வெடுக்கென்று கையை இழுத்துக்கொள்ளுதல் இயற்கை. தீயின் வெப்பத்தை உணர்வால் அறிந்துகொண்ட புழுவும் எறும்பும் தம் மேற்செலவைச் சுருக்கி உள்ளிழுத்துக் கொள்ளுதல் கண்கூடு. அச்சமுற்ற உயிரிகளும் தம் செலவையும் உறுப்புகளையும் உள்வாங்கிக் கொள்ளுதலும் வெளிப்படையே. ஆகலின், வெப்பத்தின் வழியாகச் சுரிதல் கருத்துப் பிறப்பதாயிற்று. சுரி என்பதற்குச் சங்கு, உள்வாங்கு, துளை, சுழற்சி

இன்னபல பொருள்கள் உண்டாயின. சுரிதல் என்பதற்குச் சுருங்கல், சுழித்தல், உள்வாங்கல், வளைதல், சுழலல், சேருதல் முதலிய பொருள்கள் உண்டாயின.

சுரிகுழல் என்பது சுருண்ட கூந்தலையும், சுருண்ட கூந்தலை யுடையாரையும் குறித்தது.

சுரிகை என்பது, உடைவாள், மெய்யுறை (கவசம்); சுரியிடுதல் என்பது, தமரிடுதலாம் துளையிடுதல்; சுரிமுகம் என்பது, நத்தை, ஆமை, சங்கு; சுரியல் என்பது, குடுமி கூந்தல் சுழற்சி நீர்ச்சுழி விரைவு; 'சுரியாணி' என்பது, புரியாணி.

சுரிமுகம் நத்தை முதலியவற்றைக் குறிப்பானேன்? நத்தை தன் உடலோடு ஒரு கூட்டினைக் கொண்டிருப்பதும், ஊறுவரு மிடத்து அக் கூட்டினுள் தன்னை ஒடுக்கிக்கொள்வதும் கண் டறிந்ததே. அவ்வாறே ஆமையும் தனக்குப் பாதுகாப்பான ஓட்டைக் கொண்டிருப்பதும் அதனுள் தன் ஐந்துறுப்புகளையும் (கால்கள் நான்கு, தலை ஒன்று) அச்சம் நேருங்கால் ஒடுக்கிக் கொள்வதும் அறிந்ததே. சங்கும் இத்தகையதாதல் வெளிப் படை. ஆகலின், இவையெல்லாம் சுரிதல் காரணம் கருதி இடப் பெற்ற பெயர்களாம்.

சுரிதகம் என ஓர் உறுப்பு கலிப்பாவுக்கு உண்டு. தரவு தாழிசை தனிச் சொல் சுரிதகம் என்னும் முறைவைப்பில் கலிப்பா உறுப்புகள் தொடரும்.

' ஓரிடத்து ஓடாநின்ற நீர் குழியானும் திடரானும் சார்ந்த விடத்துச் சுரிந்தோடும்; அதனைச் சுரிந்து என்றும் சுழி என்றும் வழங்குவதுபோல'' என்றும்,

''நீர்ச்சுழி போல நின்றுசுரிந் திறுதலின்
சோர்ச்சியில் புலவர் சுரிதகம் என்ப''

என்றும் யாப்பருங்கலவிருத்தி சுரிதகத்தை விளக்கும் (82).

வேண்டாததைக் கண்ட இடத்தும் கேட்ட இடத்தும் முகத்தைச் சுரியாதவர் எவர்? சுழியாதவர் எவர்?

(தொடரும்)

—·—

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

[க. . சி. கமலையா]

(முன் இதழ் ௪0௫ஆம் பக்கத் தொடர்ச்சி)

'மகட்குச் சங்கைக் குணமெனக் கருதி வெறியாடத் துணிந்த நற்ருய்க்குத் தோழி தலைவியின் முன்னிகழ்வு கூறி வெறி விலக்கல்' என்ற தலைப்பில் பாண்டித்துரைத் தேவரின் ஆருவது சிந்து அமைகிறது. தன் செல்வத் திருமகள் களவொழுக்கம்பற்றி நற்ருய் அறிந்திலள். என்ருலும் மகளின் அன்ருட வாழ்க்கையில் மாறுத லிருப்பதை அறியத் தவறுகின்ருளில்லை. முன்னர் கேட்ட வெகுளிச் சிரிப்பு எங்கே சென்று மறைந்துவிட்டது? பெரும் பாலும் பெண் தனிமையை நாடுகின்ருள்; பெருமூச்செறிகின்ருள். உண்டி சுருங்கிவிட்டது. அவளைப் பீடித்ததென்ன? மெலிந்து தெரிகின்ருள். வேலன் வெறியாடல் நிகழ்ந்தால் மகள் திருந்த வகையுண்டு என்று நற்ருய் வேண்டுவன செய்யத் துணிகின்ருள். தலைவிக்குத் தெரியும் தன்நிலை. தாய் அறிவாளோ? ஊரைக் கூட்டி வெறியாடச் செய்வதை நினைத்தாலே தலைவிக்கு நடுக்கம். தலைவிக்கு நிகழும் கூற்றில் இதுவும் ஒன்று.

'வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்'

என்று இவ்வச்சம் தொல்காப்பியத்தில் களவியலில் குறிக்கப்படு கிறது. சங்க இலக்கியத்தில் வேலன் வெறியாடல் உரைக்கப் படுகிறது. இழுமென இழிதரும் அருவிபாயும் மலையுச்சியிலிருக்கும் தலைவனை நினைந்து உருகும் தலைவியின் நிலையறியாது முதுமகளிர் முருகாற்றுப்படுத்திஞல் தெளிவாள் என்று அதற்காவன செய் கின்றனர்.

"படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்
களம்நன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்"

என்று வேலன் வெறியாடலுக் கமைக்கும் களன்பற்றி வெறிபாடிய காமக்கண்ணியாரின் அகநானூற்றுப் பாடல் (22) வரிகள் (5-11) தெரிவிக்கின்றன. அன்றிரவு நிகழ்ந்ததென்ன? 'பல்பூவண்டு பட

மலர்சூடி 'வயப்புலிபோல'க் காவலர் அறியாமல் தன்னை வந்து புல்லியதையும், புல்லுந்தொறும் புல்லுந்தொறும் தான் மெலிந்து பின் மகிழ்ச்சிச் சிரிப்பொலி எழுப்பியதையும் தலைவி உரைக்கின்றாள். வேலன் வெறியாட்டுக் களன்பற்றித் திருமுருகாற்றுப் படையிலும் தகவல் கிடைக்கிறது.

'வேலன் றைஇய வெறியயர்களன'னிலும் முருகன் உறைதற்குரியன். வெறியாட்டாளன் அலங்கரித்து வெறியாட்டைச் செய்யுமிடத்தும் முருகன் உளன். வெறியயர்களன்பற்றித் தலைவனிடம் தோழியின் கூற்றுகத் தலைவன் சூளுரைத்ததைக் குறுந்தொகைப் பாடல் ஒன்று தெரிவிக்கிறது.

"எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்
நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன
எக்கர் நண்ணிய எம்மூர் வியன்றுறை
நேரிறை முன்கை பற்றிச்
சூரர மகளிரோ டுற்ற சூளே."

(குறுந்தொகை—53. கோப்பெருஞ்சோழன்)

"புன்னைமரத்தின் கீழ் வேலன் வெறியாட்டிடத்துச் செந்நெல் பொறி சிதறியது போன்றுள்ள எம்மூர்த் துறையில் தலைவியின் முன்கை பற்றிச் சூளுரைத்தது எம்மை எவ்வளவு வருத்தியது" என்று வரைவு நீட்டித்த வழித் தோழி தலைமகற்குரைக்கிருள். யானையின் முகத்தில் அம்பு தைத்தலால் குருதி யொழுகிய காட்சியை யொத்திருக்கிறது நெடுவேள் ஆடுகளம் என்று குறிஞ்சிப் பாட்டு உரைக்கிறது.

"வார்கோல்
உடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை
அண்ணல் யானை யணிமுகத் தழுத்தலிற்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லாது
அயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவேள்
அணங்குறு மகளி ராடுகளம்"

(கபிலர்—குறிஞ்சிப்பாட்டு. வரிகள் 169-175)

தலைவிக்குநேர்ந்த மெலிவு எதனுலுண்டாயிற்று என்று வேலனைக் கேட்கத் துணிந்த செவிலி கேட்குமாறு தோழி தலைவிக்கு அவள் கொண்ட காதல் நட்பைச் சொல்கிருள். ஐங்குறு நூறு—வெறிப்பத்தில் முதற் பாட்டில் இதுபற்றிச் சொல்லப்படுகிறது.

தலைவியின் காதல் விவகாரம் வெளிப்பட்டால் வேலனாட்டத்துக்குத் தேவையேற்படாது. பெற்றோர் இணக்கத்துடன் கற்பு மணம் நிகழ வேண்டியதுதானே!

"நம்முறு துயரம் நோக்கி யன்னை
வேலற் றந்தன ளாயினவ் வேலன்
வெறிகமழ் நாடன் கேண்மை
அறியுமோ தில்ல செறியெயிற் றோயே."

(கபிலர்—ஐங்குறுநூறு 241)

வெறியாடிய வேலன் தலைமகட்குற்றநோய் முருகனால் வந்தது என்று கழங்கு குறி சொல்கிறது என்றான். செவிலி கேட்குமாறு தோழி அக் கழங்கை விளித்து, "மெய் எதுவென்று தெரியுமா? இவளை இறுகத் தழுவிய மலைத்தலைவனே இவளுடைய நோய்க்குக் காரணம்; முருகப்பெருமானன்று" என்று சொன்னாள்.

"பொய்படு பறியாக் கழங்கே மெய்யே
மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்
மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோன்
ஆண்டகை விறல்வே ளல்லனிவள்
பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே.

(கபிலர்—ஐங்குறுநூறு 250)

"தலைமகட்குப் பேய் பிடித்துவிட்டதா வெறிக்களனமைத்து வேலனாட்டம் செய்வித்து முருகனுக்குப் பூசைபோட?" தலைவி யுடனிருக்கும் தலைவன் கேட்குமாறு தோழி சொல்கிறாள். "களவொழுக்கம் நீத்துக் கற்புமணம் செய்துகொள்வீராக!" என்று சொல்வது போலிருக்கிறது தோழியின் சொற்கள்; வெறிக்களன் பற்றிய விவரமும் கிடைக்கிறது.

"மறிக்குரல் அறுத்துத் தினைப்பிரப் பிரீஇச்
செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்
தோற்ற மல்லது நோய்க்கு மருந் தாகா
வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்திப்
பேஎய்க் கொளீஇயள் இவளெனப் படுதல்
நோதக் கன்றே தோழி மால்வரை
மழைவிளை யாடு நாடனைப்
பிழையே மாகிய நாமிதற் படவே."

(பெருஞ்சாத்தனார்—குறுந்தொகை, 263)

மறியறுத்துத் தினைபரப்பிய ஆற்றுக்குறையில் வேலனாடு தற்கு வெறிக் களனமைகிறது, என்ற செய்தியும் இப் பாட்டில் காணப்படுகிறது.

வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன் குறுந்தொகைப் பாட்டில் தோழி வேலனைப் பார்த்து, "பல வண்ணச் சோறு படைத்துச் சிறு மறியின் குரல்வளை யறுத்து இப் பெண்ணின் நெற்றியில் இரத்தத்தைப் பொட்டிட்டு முருகனை வணங்கினால் அப் பலியை யுண்பது எவர்? இப் பெண்ணைத் தழுவிய மலையிலுறை தலைவனா? அன்றி முருகனா?" என்று கேட்டு வெறி விலக்கு கிறாள்.

"முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவுவ துடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவள் நறுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி யாயின் அணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
தண்டா ரகலமும் உண்ணுமோ பலியே."

(குறுந்தொகை, 362)

மகளின் களவொழுக்கம்பற்றியறியாத நற்றாய் அவள் மெலிவு கண்டு அவளைப் பீடித்த கேட்டைப் போக்க முருகனுக்குப் பூசை போட வேலன் வெறியாடலுக்கு வேண்டிய முயற்சியிலீடு படுவது சங்க காலப் பழக்கம். அவ் வெறியாடலைத் தவிர்க்கத் தோழி முற்படுவாள். நடந்ததை நற்றாய்க்குரைத்து வேலனாட் டத்தைத் தோழி விலக்குவதைப் பாண்டித்துரைத் தேவர் தம் சிந்தில் சொல்கிறார். நற்றாயைத் தோழி விளிப்பதே ஏதோ அவளிடமிருந்து பரிசுபெற அடி போடுகிறாள் என்று தோன்று கிறது:

"வாவிக் கமலவிழி யாளே யொரு
வார்த்தை யுரைப்பனது கேளே."

பீடிகை சற்று உரமானதாயிருக்கிறது. தாமரைக் கண்ணியான தாயிடம், "ஒன்று சொல்வேன், கோபித்துக் கொள்ளக் கூடாது" என்பது தோழி உரையில் தொக்கி நிற்பதை உணர்ந்துகொள்ள முடிகிறது. அதற்கு ஏற்றவாறு,

"உன்றன்
மங்கை தனக்கு வேறு சங்கைக் குணமுண்டென்று
மாதே நினை யாதே."

"எனின் என்னதான் நடந்தது?" என்று தாய் கேட்பாளன்றோ? அதற்கு முந்திக் கொண்டு, "வேட்கை தணிக்கத் தண்ணீர் கேட்டானொருவன். தண்ணீர் கொண்டு வருவதற்குள் வீட்டில் மெல்லப் புகுந்து மகளைப் புல்லிச் சென்றான் அவன். யாருமல்லன்

அவன்'', என்று சொல்லித் தாய் வாய் திறக்கு முன், ''வேலன், உமை பாலன்'' என்று சொல்லி விடுகிருள்.

மேவித்தலைக் கடையில் நின்றே சற்று
வேட்கைக்கு நீருதவு மென்றே—வீட்டில்
மெல்லப்பு குந்துமாதைப் புல்லியே சென்றானடி
வேலன் உமை பாலன்

''யானோக்குங் காலை நிலன் நோக்கும் நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்''

என்ற தலைமகன் எட்டி நில்லாமல் கிட்டித் தண்ணீர் கேட்டுத் தலைவியுடன் நெருக்கம் கொண்டான். கபிலரின் கலித் தொகைப் பாட்டை ஆசிரியர் நினைவு கூர்ந்தார் போலும்!

வேட்கை தணிக்க நீர் கேட்டு வந்தவனுக்கு நீர் கொடுக்கத் தாய் சொன்னுள். அவன் நீருட்டச் சென்றவள் வளைக்கரம் பற்றவும் 'அன்னய்' என்று அவள் கூவவும் தாய் அலறிப்புடைத் தோடி வந்து 'என்ன ?' என்று கேட்டாள். ''குடிக்கும்பொழுது தண்ணீர் விக்கிற்று'' என்று மகள் சொன்னுள். 'கடைக் கண்ணால் கொல்வான் போல் நோக்கி முறுவல் செய்தான்'' என்று தோழிக்கு மகள் கூறினுள். சிறு வயதில் சிற்றில் சிதைத் தவன் அக் கள்வன் மகன்.

''சுடர்த் தொடீஇ கேளாய் தெருவினும் ஆடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானு மிருந்தேமா இல்லிரே
உண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிமாய்
உண்ணுநீ ரூட்டிவா வென்று ளெனயானுந்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு
அன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
அன்னை யலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர் விக்கினா னென்றேனா அன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்.''

(கபிலர்—கலித்தொகை. 51)

வள்ளிக் கிசைந்த முருகேசன்—சிவஞான புரத்தினிய வாசன்—நல்லமுதை நாடி வந்ததாக உரையாடிய முருகனை நினைந்து தலைவி உருகுவதாகத் தோழி நற்றாய்க்குச் சொல்கிறாள். நீங்கிற்றெறூஉம் குறுகுங்காற் றண்ணென்னுந் தீ தான் அவளை வாட்டுகிறது. "அன்ன நிகர் மென்னடை மாதே" என்று நற்றாயை மீண்டும் விளித்துக் கந்தரனுபூதி பெற்றாள் உன் மகள். நீ செய்த தவத்தால் முருகன் உனக்கு மருகனாகின்றான் என்று தோழி பேசுகின்றாள். கவி வல்லோரும், மலர்க் கொடியும், மங்கையும் சேர வேண்டிய இடத்தில் சேர்ந்தாலல்லால் அவர்க்கு மகிமை ஏது ?

"இன்பந்தருங்கவிவல் லோரும் மலர்
இலகுங்கொ டியுமங்கை மாரும்—மிக
ஏலுஞ் சார்பையடைந் தாலல் லால்மகிமை
யேது சொல்லிப் போத."

புலவரைப் போற்றிய புரவலர் தாமே பாண்டித்துரைத் தேவரும்?

நற்றாய்க்குத் தெரிந்துவிட்டது மகளின் மெலிவுக்குக் காரணம், இனி எதற்காக வெறியயர்களனும் வேலனுடலும் ! உடன்போக்கில்லாமலே கற்பு மணம் நிகழ வேண்டியது தானே,

வாவிக்கமல விழி யாளே ஒரு
வார்த்தை யுரைப்பது கேளே—உன்றன்
மங்கை தனக்குவேறு சங்கைக் குணமுண்டென்று
மாதே நினை யாதே.

மேவித் தலைக்கடையில் நின்றே சற்று
வேட்கைக்கு நீருதவு மென்றே—வீட்டில்
மெல்லப்பு குந்துமாதைப் புல்லியே சென்றானடி
வேலன் உமை பாலன்.

வல்லிக்கி சைந்தமண வாளன் நம்மை
வாழ்விக்க வந்தருள் தயாளன்—உயர்
வாகை யுயர்ந்தசிவ ஞானபு ரத்தினிய
வாசன் குமரேசன்.

நல்லத ரத்தமுதை நாடி வந்தேன்
நல்குமெனவேயுரை யாடி—அன்று
நண்ணுமு ருகனைக்கண் டெண்ணிமிக வும்மனம்
நைவாள் எவை செய்வாள்,

கன்னிக்கொ ருதுயர மேது காமக்
காய்ச்சலி னால் மெலிவல் லாது—என்றும்

களிக்கும் வேலன்மகிழ்ந் தளிக்கும் பூதியுப
காரம் இந்த நேரம்.

அன்னநிகர் மென்னடை மாதே வீணில்
ஆட்டைப்பி டித்துவருந் தாதே—இங்கு
ஆசைக்கு ருபரனை யேசற்ற மைத்துவரில்
ஆமே துயர் போமே.

இன்பந்த ருங்கவிவல் லோரும் மலர்
இலகுங்கொ டியுமங்கை மாரும்—மிக
ஏலுஞ் சார்பையடைந் தாலல் லால்மகிமை
யேது சொல்லிப் போது

அன்பொடு நீசெய்தவந் தானே உனக்
காகிப்ப வித்ததடி மானே—நங்கை
ஆகம்ம ருவக்குகன் மோகமொ டுவிரும்ப
லாச்சே என்ன பேச்சே.

(தொடரும்)

———

## தாயே! தமிழே!

[கடலூர் மணிமாறன், க. மு, கீ. க. இ, கல். இ.]

வரலாற்றைத் தொடங்கி வைத்த வண்டமிழர்
பெருவைப்பே! வளமே! வாழ்வே!
அரசியலை வாழ்வியலை அறிவியலை
அறிந்துணர்ந்து வகுத்த தாயே!
இருளகற்ற விரைந்துவந்த எழுகதிரே!
எழில்நிலவே! நினைவே! நெஞ்சே!
பரந்தமனம் கொண்டிலங்கும் பார்புகழும்
பைந்தமிழே! வாழ்த்து கின்றேன்.

பாடலுக்குக் கருப்பொருளே! பழந்தமிழர்
முதற்பொருளே! பண்பே! எங்கும்
தேடரிய பொற்குவையே! செந்தமிழர்
போர்வாளே! இன்பம் நல்கும்
ஏடவிழ்த்த நறுமலரே! எழுச்சி தரும்
இனவுணர்வே! எழிலே! எங்கள்
நாடிகளில் முறுக்கேற்றும் நல்யாழே!
நலஞ்சேர்க்கும் தாயே வாழி!

# தண்டுலாவிய தாமரைப் பொய்கையில்...!

[பி. வி. கிரி, நிருபர் 'தமிழரசு']

பன்னிற மலர்கள் பூத்துக் குலுங்கும் பாங்கான சோலை அது. கண்ணைக் கவரும் வண்ணப் பறவைகள் சிறகடித்துச் செல்லும் அழகே கண்கொள்ளாக் காட்சி!

என்ன இன்பமூட்டும் இயற்கையோ, அங்கே எழில்மிகு கோலங்களை வரைந்துகொண்டிருந்தன! எங்கும் பச்சைப் படாம் விரித்தாற்போன்று பசுமை! பசுமை! இயற்கையன்னை களிநடம் புரியும் அந்த இன்பப் பூங்காவின் இதயம்போல் விளங்கியது ஒரு தாமரைத் தடாகம்!

பளிங்கு போன்ற அந்தப் பொய்கையில், அழகிய செந் தாமரைகளைத் தென்றல் தழுவிச் செல்கிறது. அதன் அசைவில் அலைகள் மெல்லிசை பாடுகின்றன.

அழகு, திருவிளையாடல்கள் புரியும் அந்த அமைதியான சூழ்நிலையில், ஆரணங்கு ஒருத்தி அங்கே வந்தாள்.

செந்தாமரைக் குளத்தில் செங்காந்தள் விரல்களினால் சித்திரம் வரைந்தாளோ? தண்ணீரில் அலைகள் வட்டமிடுகின் றனவே!

இயற்கை எழிலைப் பருகியும் கூட, அவளுக்கு வேட்கை தணியவில்லை போலும்! இரு கைகளால் அந்தத் தாமரை உறையும் தண்ணீரை முகந்து முகந்து வேட்கை தீரப் பருகினளா? இல்லை, இல்லை!

தண்ணீரைக் கைகளினால் முகந்தாள். அதை முகத்தருகே கொண்டு சென்றாள். பிறகு? 'மடக் மடக்'கென்று... அதுதான் இல்லை. 'சடக்'கென்று கையைத் தாழ்த்தினாள். என்ன வந்தது அவளுக்கு ?

தண்ணீரைக் குடிக்க வேண்டும். வேட்கை தணிக்க வேண்டும். இதற்குத் தயக்கம் ஏன்? பாவம்! அந்தப் பாவைக்குக் கைக்கு எட்டியது, வாய்க்கு எட்டவில்லையே!

வேட்கைதான் அவளுக்கு. ஆனால், முகந்த தண்ணீரில் கெண்டை இரண்டிருந்தால் தொண்டைக்குள் எப்படிப் போகும்?

கையிலுள்ள அந்தத் தெளிந்த குளிர்ந்த நன்னீரில் ஒரே ஒரு கெண்டை இருந்தால்கூடக் குற்றமில்லை! இரண்டு இருந்தன, இரண்டு.

ஆம், தண்ணீரை முகந்து பருகலாம் என்று முகத்தருகே கொண்டு போனாள். அவ்வளவில் என்ன நேர்ந்ததோ தெரியவில்லை. "கெண்டை! கெண்டை!" என்று கத்திக்கொண்டே கரைக்கு வந்தாள். பதறிப்போய்த் தண்ணீரைக் கீழே கொட்டினாள்.

கையைப் பார்த்தாள். கனவா? நனவா? கெண்டையுமில்லை; கெளுத்தியுமில்லை. ஒருகணம் தயங்கினாள். 'கெண்டை எங்கே?' அவை எங்கேயும் நழுவிப் போய்விடவில்லை. அவை அவளிடமே இருந்தன. அவள் தன்னையே ஒருகணம் பார்த்துக்கொள்கிறாள். அவளுக்கே சிரிப்பு வருகின்றது.

கையில் முகந்த நீரில் கெண்டை இருந்தது உண்மைதான்... கெண்டை போன்று இருந்த அவளுடைய இரு கண்களின் நிழல் தண்ணீரில் தெரிந்தமைதான் இத்தனைக் குழப்பத்துக்கும் காரணம்!

இந்த அழகிய காட்சியைப் படம்பிடித்துக் காட்டுகிறது 'விவேக சிந்தாமணி' என்னும் பழம்பாடல் ஒன்று.

நான்கு வரிகளுக்குள்ளே இவ்வளவு அரிய பெரிய காட்சியை நயம்படப் புகுத்தியுள்ள புலவரின் புலமையை என்னென்பது! அந்தப் பாட்டு இதுதான்:

"தண்டு லாவிய தாமரைப் பொய்கையில்
மொண்டு நீரை முகத்தரு கேந்தினாள்
கெண்டை கெண்டை எனக்கரை ஏறினாள்
கெண்டை காண்கிலள் நின்று தயங்கினாள்."

———

## அரிமா நோக்கு

காட்டில் வாழும் அரிமா கூடச் சிறிது தொலை சென்றபின், தான் வந்த தொலையைத் திரும்பிப் பார்த்துவிட்டுத்தான் அடுத்த அடி எடுத்து வைக்கும். அதைப்போலவே வளர்ச்சிக்குப் பின்னர்த் திரும்பிப்பார்க்க வேண்டுவது இன்றியமையாததாகும். எங்கே இருந்தோம்—இப்போது எங்கே இருக்கிறோம்—எந்த இடத்திலிருந்து இந்த இடத்திற்கு வந்திருக்கிறோம், என்றெல்லாம் எண்ணிப் பார்ப்பது முன்னேறுவதற்கொரு வாய்ப்பாக அமையும்.

—கலைஞர் மு. கருணாநிதி

# நாமக்கல் குடைவரைக் கோயில்கள்

[தி. இராசமாணிக்கம், பி ஏ., பி. காம்., விசாரத்,

கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருட்டிண சாலை, சேலம்-7 ]

சேலத்தினின்றும் ஏறக்குறைய 48கி.மீ. தொலைவில் நாமக்கல் என்ற நகரம் உள்ளது. நா என்றால் பாவத்தை அழிக்கக் கூடியது என்றும், ம என்றால் மங்கலத்தை அளிப்பது என்றும் பொருள் சொல்லப்படுகிறது. எனவே, நாமக்கல் என்றால் பாவத்தை அழித்து மங்கலத்தை அளிக்கவல்ல மலையைக் கொண்ட ஊர் என்று பொருள் கொள்ளப்படுகிறது.

நாமக்கல் என்ற நகரில் நடுவில் அமைந்துள்ள மலையின் இரு புறமும் குடைவரைக் கோயில்கள் உருவாக்கப்பட்டுள்ளன. மலையின் மேற்புறமாக உள்ள குடைவரைக் கோயிலின் முகப்பில் இரு பெரும் தூண்களும் இரு அரைத் தூண்களும் காணப்படு கின்றன. தூண்கள் மட்டும் மேலும் கீழும் சதுரமாகவும் நடுவில் எட்டுப் பட்டை கொண்டதாகவும் பகுக்கப்பட்டுள்ளன. சதுரங்களில் தாமரை இதழ்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதனை ஒட்டி அந்தராளம் என்னும் பகுதி உள்ளது. அதனை அடுத்து இரண்டாவது வரிசையாக நான்கு தூண்களும் இரண்டு அரைத் தூண்களும் உருவாக்கப்பட்டுள்ளன. நான்கு தூண்கள் உள்ள சதுரங்களும் இரண்டு எட்டுப் பட்டைகளும் கொண்டவையாக உள்ளன. பல்லவர், பாண்டியர் மற்றும் முத்தரையர் குடை வரைக் கோயில்களில் உள்ள தூண்களுக்கு இரண்டு சதுரங்களும் ஓர் எட்டுப் பட்டையும்தாம் உள்ளன. எனவே, இஃது ஏனைய குடைவரைக் கோயில்களினின்றும் மாறுபட்டுக் காணப்படுகிறது எனத் திரு வித்யாதேஹஜியா தமது "நாமக்கல் குடைவரைகள்" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். சதுரங்களில் தாமரை இதழ் களும் தூண்களுக்கு இடை நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகைகளும் அமைக்கப்பட்டுள்ளன. அரைத் தூண்களை ஒட்டிய போதிகைகள் கோண வடிவில் உள்ளன. இரண்டாவது வரிசைத் தூண்களுக்கு மேலே கந்தர்வர்கள் தலைகளுடன் கூடிய நான்கு கூடுகள் கொண்ட கபோதம் காணப்படுகிறது. கூடுகள் பல்லவர்கள் பாணியில் அமைக்கப்பட்டுள்ளன. கீழே வரி, வரி மானம், குமுதம் ஆகியவற்றுடன் கூடிய அதிட்டானம் உருவாக்கப் பட்டுள்ளது. பல்லவர்கள் மற்றும் பாண்டியர்களின் குடைவரைக்

கோயில்களில் கபோதம் மற்றும் அதிட்டானம் கருவறையின் பகுதிகளாக உள்ளன. ஆனால், இங்கு அவை இரண்டாவது வரிசைத் தூண்களின் பகுதிகளாக அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. வாயிற் காப்போர் இங்கு அமைக்கப்படவில்லை. கருவறையின் உள்ளே திருமால்,

> "மாறு கொண்டு உடன்று எதிர்ந்த வல்லவுணன் றன் மார்பகம்
> கூறு கொண்டவன்" [இருபிளவா

திருவுருவில் மேற்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ளான். வீராசனத்தில் அமர்ந்துள்ள அவனுக்கு நான்கு கைகள் அமைக்கப்பட்டுள்ளன.

> "அளந்திட்ட தூணை அவன் தட்ட ஆங்கே
> வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய்
> உளந்தொட்டு இரணியன் ஒண்மார்பகலம்
> பிளந்திட்ட கை"

என்பர் பெரியாழ்வார். இரணியனது மார்பைப் பிளந்த கை எனவே நரசிம்மரின் முன்வலக்கையில் சிவப்பு நிறம் காணப்படுகிறது எனச் சொல்லப்படுகிறது. கையில் சிவப்பு நீரோட்டம் அமையும்படி அமைத்த சிற்பியின் கைவண்ணம் பாராட்டற்குரியது. முன் இடக்கை தொடைமீது உள்ளது. பின்வலக்கையில் சங்கும், பின்இடக்கையில் சக்கரமும் உள்ளன. பொதுவாகக் கை கத்திரி முத்திரையில் காட்டப்பட்டு நீண்ட இரு விரல்களுக்கு இடையில் சங்கும் சக்கரமும் அமைக்கப்பட்டிருக்கும். இங்குக் கைகள் கத்திரி முத்திரையில் இருப்பினும் சங்கும் சக்கரமும் விரல்களுக்கு இடையில் இல்லாது தனியாக மேலே காட்டப்பட்டுள்ளன. நாமக்கல் குடைவரைக் கோயில்களில் உள்ள எல்லா வடிவங்களிலும் இந்தப் பாணி பின்பற்றப்படுகிறது. இது வேறு எங்கும் காண்டற்கரிய தனிச் சிறப்பாகும்.

> "அந்தியம்போதில் அரியுருவாகி அரியை அழித்தவன்"

இரு மருங்கிலும் சாமரங்களுடன் சூரிய சந்திரர்களும் வலப் புறம் சிவனும் இடப் புறம் நான்முகனும் காணப்படுகின்றனர். மதுரை மாவட்டம் ஆனைமலை குடைவரைக்கோயில் மற்றும் செங்கை மாவட்டம் சிங்கப் பெருமாள் கோயிலில் உள்ள குடைவரைக் கோயில் ஆகியவற்றில் நரசிம்மர் மட்டும் உருவாக்கப்பட்டுள்ளார். ஆகமங்களிலும் நரசிம்மர் சிவன் நான்முகன் இருப்பதாகக் குறிப்பிடப்படவில்லை. நரசிம்மர், சூரிய சந்திரர்கள் சிவன், நான்முகன் ஆகியோருடன் அமைக்கப்பட்டுள்ளது இந்தக் கோயிலின் மற்றுமொரு சிறப்பாகும்.

ஆகமங்களில் நரசிம்மரை யோக நரசிம்மர், உக்ர நரசிம்மர், பாலக நாரசிம்மர் மற்றும் லட்சுமி நாசிம்மர் என நான்கு வகையாகக் கூறப்பட்டுள்ளது. லட்சுமி நரசிம்மர் வடிவில் திருமகள் இறைவனது மடியில் அமைக்கப்பட்டிருக்கவேண்டும். ஆனல் இங்கு மலர்மகள் அவ்வாறு உருவாக்கப்படவில்லை. நரசிம்மரது மார்பில் தனியாக அணிந்துள்ள மாலையில் லட்சுமி காணப்படுகிருள். இருப்பினும் இவன் லட்சுமி நரசிம்மர் எனப்படுகிருன்.

"திண்ணியது ஓர் அரிஉருவாய்த் திசையனைத்தும் நடுங்கத்
தேவரொடு தானவர்கள் திகைப்ப இரணியனை
நண்ணியவன் மார்பகலத்து உகிர் மடுத்த நாதன்"

என்பர் திருமங்கை மன்னன். எந்த வானவர்களுக்காக இரணியனைக் கொல்லத் திருமால் நரசிம்மர் உருக்கொண்டானே அந்த வானவர்கள் இவ் வடிவினைக் கண்டு அஞ்சி நடுங்கினராம். அத்தகைய அச்சத்தை அளிக்கும் வடிவத்தில் இங்குச் சாந்தம் தவழ்கிறது.

வலப் புறத்தில் உக்ர நரசிம்மர் புதை சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளார். எட்டுக் கைகளுடன் உருவாக்கப்பட்டுள்ள இவன் கைகளில் சங்கு சக்கரம் கத்தி வில் ஆகியவை காணப்படுகின்றன. ஒரு கை அசுரனின் முழங்காலையும், மற்ருெரு கை அசுரனின் ஒரு கையையும் பிடித்துக்கொண்டுள்ளன. மீதி இரு கைகளும் அசுரனின் மார்பைப் பிளக்கும் நிலையில் காணப்படுகின்றன. இறை வடிவங்களுக்குப் பொதுவாக நான்கு கைகள்தாம் அமைக்கப்படும். ஆனல், பேராற்றலைக் காட்ட எட்டுக் கைகள் உருவாக்கப்படும். எடுத்துக்காட்டாகச் சிவனின் திரிபுராந்தக வடிவிலும் சக்தியின் மகிடாசுரமர்த்தினி வடிவிலும் எட்டுக் கைகள் அமைக்கப்பட்டுள்ளன. அம் மரபினை ஒட்டி இங்கும் நரசிம்மருக்கு எட்டுக் கைகள் உருவாக்கப்பட்டுள்ளன. பல்லவர்களின் குடைவரைக் கோயில்களில் உள்ள நரசிம்மர் புதை சிற்பமாக உருவாக்கப்படவில்லை. பாண்டியர்களது திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலில் மட்டும் இத்தகு வடிவினைக் காணலாம்.

"ஓடாத வாளரியின் உருவமது கொண்டு அன்று
உலப்பில்மிகு பெருவரத்த விரணியனைப் பற்றி
வாடாத வள்ளுகிரால் பிளந்தவன்"

என்றும்,

"முடியுடை அமரர்க்கு இடர்செய்யும் அசுரர்தம்
பெருமானை அன்றுஅரியாய்
மடியிடை வைத்து மார்பை முன் கீண்டாயனுர்"

என்றும் கூறிப் போந்த மங்கை மன்னன் திருவாக்குகளுக்கு இந்த வடிவம் ஓர் இலக்கியமாக அமைந்துள்ளது.

உக்ர நரசிம்மரை யொட்டித் திருமால் வைகுந்த நாராயணனாக உருவாக்கப்பட்டுள்ளான். ஐந்தலைப் பாம்பின்மீது உத்குடி ஆசனத்தில் அமர்ந்துள்ள இறைவன் நான்கு கைகளுடன் காணப்படுகின்றான். பின்வலக்கையில் சக்கரமும் பின்இடக்கையில் சங்கும் உள்ளன. இவை முன்னரே குறிப்பிட்டாற் போன்று கைகளுக்கு மேலே தனியாக உள்ளன. வலப்புறம் சிவனும் இடப்புறம் நான்முகனும் உருவாக்கப்பட்டுள்ளனர். கீழே பால நரசிம்மர் காணப்படுகின்றார். தான் எந்த வடிவில் இரணியனைக் கொல்லுவன் என்பதைத் திருமால் வானவர்களுக்கு முன் கூட்டித் தெரிவிப்பதை இது சுட்டிக் காட்டுகிறதாம். அவனது முன்வலக்கை அபய முத்திரையில் இருப்பதால் அவன் அபய நரசிம்மர் என்றும் சொல்லப்படுகிறான். வைகுந்தநாதன் வடிவில் பாலநரசிம்மர் காணப்படுவது வேறு எங்கும் காண்டற்கரிய புதை சிற்பம் என, திரு வித்யா தேஹஜியா குறிப்பிட்டுள்ளார். இதுவும் இந்தக் கோயிலில் மற்றுமொரு சிறப்பாகும்.

(தொடரும்)

———

---

## திருவிளையாடல் புராணத் தொடர் சொற்பொழிவுகள்

34, சாவடித் தெரு, பல்லாவரம் (இரயில் நிலையம் அருகில்). மறைமலையடிகள் கலைமன்றத்தின்கண் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில் சைவப் பிரசங்கமணி திரு. ஏ. டி. ஏ. ஈஸ்வர், எம்.எப்.எஸ்.சி., ஏ. எப். ஐ. சி. டி. (இலண்டன்) ஏ.ஆர்.எஸ்.எச். (இலண்டன்) (முன்னாள் துறைமுக அதிகாரி) அவர்கள் 31—1—82 முதல் ஞாயிறுதோறும் மாலை 4 மணியளவில் திருவிளையாடல் புராணத் தொடர் சொற்பொழிவு ஆற்றிவருகிறார்கள். அன்பர்கள் திரண்டு வந்து சிறப்பிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

அன்பன்

வ. சுப்பையா,

செயலர்.

---

# மங்கலப் பொருத்தம்

[அரங்க நாங்கிள்ளி]

முன்னுரை :

பாட்டியல் இலக்கண நூல்கள், பிரபந்தம் பாடப்படும் போது பிரபந்தத்தின் முதல் சொல்லில் பத்து வகைப் பொருத்தங்களை யும் அமைத்துப் பிரபந்தம் பாட வேண்டும் எனக் கூறுகின்றன. அப் பத்து வகைப் பொருத்தங்களாவன : 1. மங்கலப் பொருத்தம், 2. சொல் பொருத்தம், 3. எழுத்துப் பொருத்தம், 4. தானப் பொருத்தம், 5. பால் பொருத்தம், 6. உண்டிப் பொருத்தம், 7. வருணப் பொருத்தம், 8. நாள் பொருத்தம், 9. கதிப் பொருத்தம், 10. கணப் பொருத்தம் என்பனவாம். இவற்றுள் முதலாயதும், தலையாயதுமாகக் கருதப்படும் மங்கலப் பொருத்தம் பற்றி ஆய்வதே இக் கட்டுரையின் நோக்கம்.

பொருத்தம்—மங்கலப் பொருத்தம் :

பொருத்தம் என்று கூறும்போது, பொருத்தமல்லாதது என்பதும் நினைவிற்கு வரும். ஏதேனும் இரண்டை வைத்து ஒப்பிட்டுப் பார்த்து அவற்றுள் பொருத்தமற்றதை நீக்கிப் பொருத்தமுள்ளதை ஏற்றுக்கொள்வதையே பொருத்தம் என லாம். இவ் வடிப்படையிலே, பொருத்தமற்ற சொற்களை அல்லது அமங்கலச் சொற்களை நீக்கிப் பொருத்தமுள்ள சொற் களை அல்லது மங்கலச் சொற்களையே முதன்மொழியாகக் கொண்டு இலக்கியம் பாட வேண்டும் எனப் பாட்டியல் இலக்கண நூல்கள் கூறுகின்றன. இதை மங்கலப் பொருத்தம் என்று பாட்டியல் நூல்கள் கூறுகின்றன.

பத்து வகைப் பொருத்தம்பற்றிய கருத்து :

பாட்டியல் இலக்கண நூல்கள் கூறுகின்ற பொருத்த இலக்கண அமைப்புகள் அனைத்துமே (பத்துவகையும்) தமிழுக்கு உரியதல்ல வென்றும், இது கி. பி. 7—8 ஆம் நூற்றாண்டில் வட நாட்டினரின் வருகையால் தமிழில் புகுந்தனவென்றும் டாக்டர் அ. சிதம்பர நாத செட்டியார் கூறுவார். இவர் கருத்தையே டாக்டர் ந. வி. செயராமனும் உடன்படுவார். இக் கருத்து முற்றிலும் சரியானதாகத் தெரியவில்லை. மங்கலப் பொருத்தம், சீர்ப் பொருத்தம் போன்றவற்றைப் பார்க்கும்போது இது தமிழிலக்

கியங்களில் சங்க காலந் தொட்டு நடைமுறைப்படுத்தப்பட்டு வந்திருக்கிறது என்பது தெரிய வருகிறது. வருணப் பொருத்தம் ஆரியத் தாக்கத்தால் தமிழிலக்கணத்தில் நுழைந்தது உண்மையே. ஆனால் இதை வைத்தே, பாட்டியல் இலக்கணங்கள் கூறும் பத்து வகைப் பொருத்த இலக்கண அமைப்புக்கள் முழுதும் தமிழுக்குரியதல்ல எனக் கூறுவது மறு ஆய்விற்குரியது. ஏனெனில் ஆரிய சமய அடிப்படையில் இருக்கும் வருணப் பொருத்தத்தைத் தவிர ஏனைய பொருத்தங்கள் தமிழரின் சோதிடக் கலையோடும் பழங்கால நம்பிக்கைகளோடும் தொடர்புடையன வாக உள்ளன. எனவே சமயம், சோதிடம், நம்பிக்கை ஆகிய இம் மூன்றும் ஒன்றாகக் கலந்த நிலையில் இடைக்காலத்தில் பத்து வகைப் பொருத்தங்கள் பாட்டியல் இலக்கண நூல்களில் இடம் பெற்றன எனக் கொள்வது பொருத்தமாகும்.

### பாட்டியல் இலக்கணங்களும் மங்கலப் பொருத்தமும்:

மங்கலப்பொருத்தம்பற்றிப் பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், வரையறுத்த பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல், தொன்னூல் விளக்கப் பாட்டியல், முத்து வீரியப்பாட்டியல், பிரபந்தத்திரட்டு, பிரபந்த தீபிகை, சுவாமி நாதப் பாட்டியுல் ஆகிய பதினொரு பாட்டியல் நூல்கள் கூறுகின்றன. இப் பொருத்தத்தின் இன்றியமையாமை கருதியே வரையறுத்த பாட்டியலானது மங்கலப் பொருத்தத்தை மட்டும் விரிவாகப் பேசுகிறது. இந்தப் பதினொரு நூல்களும் பிரபந்தத்தின் முதன்மொழியாக அமையவேண்டிய மங்கலச் சொற்களின் பட்டியலைத் தருகின்றன. அவற்றில் பன்னிரு பாட்டியல் பொன் முதல் ஞெண்டு வரை 28 மங்கலச் சொற்களை யும், வெண்பாப் பாட்டியல் சீர் முதல் நிலம் வரை 19 மங்கலச் சொற்களையும், நவநீதப் பாட்டியல் மா முதல் திகிரி வரை 25 மங்கலச் சொற்களையும், வரையறுத்த பாட்டியல் சீர் முதல் தேர் வரை 15 மங்கலச் சொற்களையும், பிரபந்த தீபிகை சீர் முதல் மாவரை 18 மங்கலச் சொற்களையும், சுவாமிநாதப் பாட்டியல் கங்கை முதல் நாள் வரை 35 மங்கலச் சொற்களையும், தொன்னூல் விளக்கப் பாட்டியல் கங்கை முதல் நீர் வரை 24 மங்கலச் சொற் களையும், இலக்கண விளக்கம் பாட்டியல் சீர் முதல் திகிரி வரை 25 மங்கலச் சொற்களையும், பிரபந்தத் திரட்டு நீர் முதல் பிறை வரை 24 மங்கலச் சொற்களையும் பட்டியல் போட்டுத் தருகின்றன. பிற என்ற வகையினான் உரையாசிரியர்கள் மேலும் பல மங்கலச் சொற்களைத் தமது உரையில் தருகின்றனர்

பாட்டியல் நூல்கள் ஒவ்வொன்றும் பல்வேறு வகையான மங்கலச் சொற்களின் பட்டியலைத் தருகின்றமையால் பாட்டியல் ஆசிரியர்கள் பிரபந்தங்களின் முதற் சொல்லாக அமைய வேண்டிய மங்கலச் சொற்கள்பற்றிய வரையறையில் திட்டவட்டமாக இல்லை என்பது தெரிகிறது. ஆனால் இரண்டும் இரண்டிற்கு மேற்பட்ட பாட்டியல் நூல்களில் இடம் பெற்றுள்ள ஒத்த மங்கலச் சொற்களாக 31 மங்கலச் சொற்கள் கிடைக்கின்றன. எனவே இச் சொற்களே பாட்டியல் ஆசிரியர்களால் இன்றியமையாதன வாகக் கருதப்பட்டிருக்க வேண்டும் எனக் கருத இடமுண்டு. அவை 1. அமுதம், 2. ஆரணம், 3. உலகம், 4. எழுத்து, 5. கங்கை, 6. கடல், 7. கார், 8. களிறு, 9. சீர், 10. சொல், 11. திகிரி, 12. திரு, 13. தேர், 14. நாள், 15. நிலம், 16. நீர், 17. பரி, 18. பரிதி, 19 பழனம், 20. பார், 21. பால், 22. புகழ், 23. புயல், 24. புனல், 25. பூ, 26. பொன், 27. மணி, 28. மதி, 29. மலை, 30. மா, 31. வயல் என்பதாகும். இச் சொற்களில் ஏதேனும் ஒரு சொல்லை முதற் சொல்லாகக் கொண்டு பிரபந்தம் பாடப்பட வேண்டும் என்பது பாட்டியலாரின் கருத்து.

**சங்க இலக்கியமும்—மங்கலப் பொருத்தமும் :**

இலக்கியம் பாடத் துவங்கும்போது முதலடியின் முதற் சொல் மங்கலச் சொல்லாக அமைய வேண்டும் எனும் மரபைச் சங்க இலக்கியம் முதற் கொண்டு அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களில் தொடர்நிலைச் செய்யுளாக அமைந்த எல்லா இலக்கியங்களும் மங்கலப் பொருத்தம் அமைத்தே பாடப்பட்டுள்ளன. சான்றாகச் சிறுபாணாற்றுப் படை 'மணி' என்ற மங்கலச் சொல்லுடனும், பெரும்பாணாற்றுப் படையில் (அகலிரு) 'விசும்பு' எனும் மங்கலச் சொல் அடையடுத்தும், திருமுருகாற்றுப்படை 'உலகம்' எனும் மங்கலச் சொல்லுடனும், மலைபடு கடாம் எனும் கூத்தராற்றுப் படை 'திரு' எனும் மங்கலச் சொல்லுடனும், மதுரைக் காஞ்சி (ஓங்கு) 'திரை' எனும் அடையடுத்த மங்கலச் சொல்லுடனும், பட்டினப் பாலை (வசையில்) 'புகழ்' எனும் மங்கலச் சொல்லுடனும், குறிஞ்சிப் பாட்டு (அன்னாய்) 'வாழி' எனும் அடையடுத்த மங்கலச் சொல்லுடனும், முல்லைப் பாட்டு (நனந்தலை) 'உலகம்' எனும் மங்கலச் சொல்லுடனும், நெடுநல் வாடை 'வையகம்' (உலகம்) எனும் மங்கலச் சொல்லுடனும் பாடப் பட்டுள்ளமையைக் காணும்போது மங்கலச் சொற்களைத் தேர்ந்து மங்கலப் பொருத்தம் அமையப் பாடும் முறை சங்க காலத்திலே இருந்துள்ளது எனத் தெரிகிறது.

**காப்பியங்களும்—மங்கலப் பொருத்தமும்:**

இலக்கியத்தின் முதன்மொழியில் மங்கலப் பொருத்தம் அமையப் பாடும் முறை காப்பிய இலக்கியங்களிலும் கையாளப் பட்டிருக்கிறது. சான்றாகச் சிலம்பு 'திங்கள்' எனும் மங்கலச் சொல்லுடனும் மணிமேகலையும், சிந்தாமணியும் , கம்பராமாயணமும் 'உலகம்' எனும் மங்கலச் சொல்லுடனும், சூளாமணி 'மஞ்சு' எனும் மங்கலச் சொல்லுடனும், நீலகேசி 'மா' எனும் மங்கலச் சொல்லுடனும் நூல் துவங்குவதைப் பார்க்கும்போது காப்பியங்களிலும் இம் மங்கலப் பொருத்தம் கையாளப்பட்டு வந்திருக்கிறது என்பது தெரிகிறது.

**சிற்றிலக்கியங்களும்—மங்கலப் பொருத்தமும்:**

சிறப்பினைப்பெற்ற எல்லாச் சிற்றிலக்கியங்களுமே மங்கலப் பொருத்த அடிப்படையிலே துவங்கப்பட்டிருக்கிறது. ஆனால் எல்லாச் சிற்றிலக்கியங்களையும் உதாரணமாகக் காட்டமுடியாதாகையால், சில முக்கியமான சிற்றிலக்கிய வகைகளின் முன்னோடி நூல்களை மட்டும் சான்றாகக் காட்டலாம். கலிங்கத்துப் பரணி 'புயல்' எனும் மங்கலச் சொல்லுடனும், திருக்கயிலாய ஞான உலா 'திரு' எனும் மங்கலச் சொல்லுடனும், திருக்கோவையார் 'மதி' எனும் மங்கலச் சொல்லுடனும், தமிழ்விடுதூது 'சீர்' எனும் மங்கலச் சொல்லுடனும், மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ் 'கார்' எனும் மங்கலச் சொல்லுடனும், குற்றாலக் குறவஞ்சி தேர் எனும் மங்கலச் சொல்லுடனும், நந்திக்கலம்பகம் 'மண்டலம்' (உலகம்) எனும் மங்கலச் சொல்லுடனும் துவங்குகிறது.

இவ்வாறு சங்ககாலம் முதற்கொண்டு கி. பி. 9 ஆம் நூற்றாண்டு வரை எழுந்த இலக்கியங்களும் பாட்டியல் நூல்கள் கூறுகின்ற பொருத்த இலக்கண மரபையொட்டியே எழுந்துள்ளமையைக் காணும்போது பாட்டியல் இலக்கண நூல்கள் கூறுகின்ற மங்கலப் பொருத்தம் என்பது தமிழ்மொழிக்கே உரியது என்பதும், இது வடநாட்டிலிருந்து வந்த இறக்குமதிச் சரக்கு அல்ல என்பதும் புலனாகும். மேலும் இலக்கியங்கண்டதற்கு இலக்கணம் என்பதுபட முன்னைய இலக்கியங்களே பாட்டியலில் மங்கலப் பொருத்தம் எனும் பொருத்த இலக்கணம் செய்யக் காரணமாயிற்று எனலாம்.

**மங்கலப்பொருத்தமும் சில வரையறைகளும்:**

வரையறுத்த பாட்டியலும், பிரபந்ததீபிகையும் தவிர மற்ற எல்லாப் பாட்டியல் நூல்களும் மங்கலப் பொருத்தத்தில் முதற் சொல்

லாக அமையவேண்டிய மங்கலச் சொற்களை மட்டுமே தொகுத்துத் தருகின்றன. ஆனால் மேற்சொன்ன இரு பாட்டியல் நூல்களும் பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரின் முதலெழுத்திற் கேற்பப் பிரபந்தத்தின் முதற்சொல் அமைக்கப்பட வேண்டும் என வரையறுத்துக் கூறுகின்றன. அஃதாவது இன்னின்ன எழுத்து இயற்பெயரின் முதலெழுத்தாக இருந்தால் அதற்கு இன்னின்ன மங்கலச்சொல் அமைக்க வேண்டும் எனக் 'கூறுகின்றன. சான்றாக வரையறுத்த பாட்டியல் ச. சா, பெ, பே, பொ, போ, வெ, வே எனும் எழுத்துக்களை முதலெழுத்தாக உடைய பெயர்களுக்கு 'பார்' எனும் மங்கலச்சொல்லே முதன் மொழியாக அமையவேண்டும் எனக் கூறுகின்றது. இப்படியே எல்லா எழுத்திற்கும் கூறிக்கொண்டே போகிறது. இந்த வரையறையைக் கொண்டு பிரபந்தங்களைப் பார்க்கும்போது இந்த இலக்கணத்தை அடியொற்றியே மங்கலச்சொல் அமைக்கப்பட்டிருப்பது தெரிகிறது. இதை ஒரு சில சான்றுகளைக்கொண்டு உறுதி செய்யலாம். சங்கரலிங்க உலாவில் தலைமகனது இயற்பெயரின் முதலெழுத்து 'ச' எனவே சகரத்திற்குரிய 'பார்' எனும் மங்கலச் சொல்லுடனே நூல் துவங்குகிறது. இதேபோல பூ எனும் மங்கலச்சொல் கௌ, கை, ம, மா, மீ, மு, மூ, வை, வௌ எனும் எழுத்துக்களில் ஏதேனும் ஒன்றை இயற்பெயரின் முதலெழுத்தாக உடைய பாட்டுடைத் தலைவனது நூலுக்கு மங்கலப் பொருத்தமாக அமைக்கலாம் என்கிறது. இதற்குச் சான்றாகத் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ் பூ எனும் மங்கலச் சொல்லுடன் துவங்குவதைக் காட்டலாம். இதிலிருந்து பாட்டியல் நூல்கள் கூறிய சில இறுக்கமான வரையறைகட்கும் இலக்கியங்கள் கட்டுப்பட்டுள்ளன எனத் தெரிகிறது.

**மங்கலப்பொருத்தமும்—நம்பிக்கையும் :**

மங்கலச் சொல்லை முதல் சொல்லாக வைத்துப் பிரபந்தம் பாடினால் தலைவனுக்கு நன்மை உண்டாகும் என்றும் பிற சொற்களை முதற்சொல்லாக அமைந்துப் பாடினால் தலைவனுக்குத் தீமை உண்டாகும் என்றும் நம்பினர். இதைப் பன்னிரு பாட்டியல் :

> "சொல்லிய மரபின் மங்கலஞ் சிதைத்துப்
> புல்லுதல் குற்றம் பொருட்டலை மகற்கே"[2]

என்று கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

அடுத்து மன்னனின் பகையரசனையும், தாம் பாடிய பாடலுக்குப் பரிசில் வழங்காதோரையும் சிதைக்க மங்கலச் சொல்லைச் சிதைத்துப் பாடலாம் என்பதைப் பன்னிரு பாட்டியல் :

"தொடுகழல் வேந்தன் துன்று தோறும்
வடுவறு பரிசில் வழங்கா தோரும்
கெடுதல் வேண்டிச் சிதைத்தலும் உரித்தே"[3]

எனக் கூறுகிறது.

முடிவுரை: இக் கட்டுரையில் மங்கலப் பொருத்தம் அமைக்கப் பயன்படுத்தும் மங்கலச் சொற்கள் இன்னின்ன என்பதையும் மங்கலப் பொருத்தம் சங்க இலக்கியம் முதற்கொண்டு அமைத்துப் பாடியிருப்பதால் அது தமிழுக்கே உரியதென்றும், மங்கலப் பொருத்தம் தொடர்பாகச் சில நம்பிக்கைகளும் புலவரிடையே இருந்தன என்பதும் காணப்பட்டன.

குறிப்புகள்

1. A. Chidambaranatha Chettiar. Advanced Study in Tamil prosody. p. 188.

2. பன்னிரு பாட்டியல் நூ. 72.

3. ,, ,, நூ. 73.

———

## உள்ளங் கவர்ந்தவள் நீயே!

[தி. நா. அறிவு ஒளி, க. மு., கல். இ.,]

முதனிலை:

உள்ளங் கவர்ந்தவள் நீயே!—உலக
மொழிகளை உயிர்த்தநற் றாயே! (உள்ளம்)

இடைநிலை:

கள்ளம் அறியாக் கலைத்தமிழே
கடமை யுணர்த்தும் கனியமிழ்தே! (உள்ளம்)

முரிநிலை:

நாவிற் கெளிய பேச்சுமொழி நீ!
நாட்டுக் கினிய ஆட்சிமொழி நீ!
பாவிற் செழித்த பாட்டுமொழி நீ!
பாரிற் சிறந்த வாழ்க்கைமொழி நீ! (உள்ளம்)

ஆற்றல் நிறைந்த ஆண்மை மொழி நீ!
ஆக்கம் அளிக்கும் ஆர்வமொழி நீ!
போற்றும் அறத்தைப் பூக்கச்செய்தாய்!
புதுமை நலத்தைக் காக்கும் என்தாய். (உள்ளம்)

# பாரதி நோக்கில் குமுகாயம்

[மா. இராமச்சந்திரன், இளங்கலை (வேதியல்)
(அ. வ. அ. கல்லூரி, மாயூரம்)]

"ஓதுகின்ற நூல்களெல்லாம் உரைக்கும் தெய்வம்
ஒன்றெனவே உணர்ந்திங்கு பாந்தர்க் குள்ளே
பேதமிலாப் பெருவாழ்வு மலர வேண்டும்
பெண்ணடிமை நாட்டினிலே தீரவேண்டும்
சாதியெனும் கொடுமையினைத் தகர்க்க வேண்டும்
சார்ந்துவரும் வறுமையினை ஒழிக்க வேண்டும்"

பாரதப்பெருநிலம் இயற்கைப்பரப்பால் ஒரே நாடு. பாரத மக்கள், பண்பாட்டு உறவுவழி ஒரே சமயத்தினர். ஆயினும் ஒன்றரை நூற்றுண்டுகளுக்கு மேலாக அயலவர் மேலாண்மைக்குப் பாரதம் அடிமைப்பட்டிருந்ததால் எத்தனை எத்தனையோ குறைபாடுகள் தோன்றின. சாதிகளிடையே, சமயங்களிடையே, இனங்களிடையே ஒவ்வொரு துறையிலும் ஏற்றதாழ்வுகள். இவற்றையெல்லாம் களைந்து, மக்களையெல்லாம் ஒன்றுபடுத்திப் புதியதொரு குமுகாய அமைப்பினைப் படைக்க விரும்பியவர், எட்டயபுரம் புதுமைக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார்.

**புதுமைப் பெண் :**

பாரதி படைக்கும் 'புதுமைப் பெண்'ணில் பாரதநாட்டுப் பெண்கள் முன் இருந்தநிலை, இப்போது இருக்கும் நிலை, இனி இருக்கவேண்டிய நிலை மூன்றையும் தொகுத்துக் கூறியுள்ளார்.

"நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கும் இருத்தலால்
செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்"

என்றார்.

'மூத்த பொய்மைகள் யாவும் அழிப்பாராம்; மூடக்கொள்கைகள் யாவும் தகர்ப்பாராம்' எனப் புதுமைப் பெண் செய்யும் செயல்களைக் குறிப்பிடுகின்றார். கடைசியாகச் சொல்கின்றார்,

"காதல் ஒருவனைக் கைப்பிடித்தே அவன்
காரியம் யாவினும் கைகொடுத்தே"

அறங்கள் பல செய்யவேண்டும் என்று.

உத்தமர்களை, மேதைகளை, கவிஞர்களை மட்டுமா பெண் இனம் பெற்றது? இல்லை. இல்லை. மக்களினம் முழுமைக்கும் பிறப்பிடம் பெண்ணே. அப் பெண்ணின் நிலையென்ன? இது பற்றிப் பாரதி வெகுண்டு கூறுகிறார் :

"ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்
றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்
வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டிவைப் போமென்ற
விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்"

இப் பாடல் பள்ளிதோறும் பாடப்படுமானால், புதியதொரு சூழ்நிலை உருவாகுமன்றோ? எனவே,

"மாட்டை யடித்து வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டு வந்தே
வீட்டினி லெம்மிடங் காட்ட வந்தாரதை
வெட்டி விட்டோ மென்று கும்மியடி"

என்று குமுகாய முன்னேற்றத்தில் பங்குகொண்டு புதியதொரு குமுகாயத்தை உருவாக்க விரும்பினர் என்பது தெரிகிறது.

"வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்
வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்"

என்று கூறி,

"மாத ரறங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச் செய்து வாழ்வமடி"

என்று நிமிர்ந்துநின்று கும்மியடிப்பது உறுதிமுழக்கமாகும்.

"பட்டங்க ளாள்வதுஞ் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டு மறிவினி லாணுக்கிங் கேபெண்
இளைப்பில்லை காணென்று கும்மியடி"

என்று கூறுகின்றார். அவர் கண்ட புதுமைப்பெண் இவ்வாறு இருக்க வேண்டும் என்று விரும்புகிறார்.

உயிரை ஏற்று, உயிரைக் காத்து வைத்திருந்து உயிரை வெளிப்படுத்தும் தாய்க்குலத்திற்கே, புதிய நெறிகளை வகுக்கும் பொறுப்பு அதிகமாக உண்டு. அதனாலன்றோ,

"போற்றிதாய்' என்று தாளங்கள் கொட்டடா
போற்றிதாய் என்று பொற்குழ லூதடா"

என்று முழங்குகிறார்.

**சாதிக் கொடுமை :**

"ஏழையென்றும் அடிமையென்றும், எவரும் இல்லை, சாதியில்
இழிவுகொண்ட மனிதர்என்பது இந்தியாவில் இல்லையே"

என்று சொல்லும்போது ஒற்றுமையுள்ள குமுகாயத்தைப் படைக்க முனையும் இவரது குறிக்கோள் நன்கு விளங்குகின்றது. அவர் நடத்திய 'இந்தியா' பத்திரிகையில், 'ஜாதி' என்ற தலைப்பின் கீழ், நம்மிடையே புரையோடிப் போயிருக்கும் சாதிமத பழக்க வழக்கங்களைக் களையு வேண்டுமென அறிவுறுத்துகின்றார்.

"சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம்
நீதி உயர்ந்தமதி கல்வி —அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்"

எல்லாச் சாதிகளிலும் கூர்த்த மதியினர் இருப்பதும் கோடி கொடுத்தாலும் நீதி தவறாத சான்றோர் நோன்பிருப்பதும் நாடறிந்த உண்மையாகும். ஊருக்கு ஊர் ஒருவரைக் காட்டி 'இவர் உத்தமர்' என்று பெருமிதம் கொள்வதும், 'இவர் அறி வாளி; இவரைக் கேட்டுத் தெளிவு பெறுவோம்' என்பதும் நாம் அறிந்ததே. அத்தகைய வழிகாட்டிகள் சிலரே ஆயினும், அவர்கள் இரண்டொரு சாதிப்பட்டிகளிலேயே அடைபட்டுக் கிடக்கவில்லை. கறுத்தவர், வெள்ளையர், அந்தச் சாதி, இந்தச் சாதி என்று நாமே பாகுபடுத்திக்கொண்டு பாழ்பட்டுக்கொண்டிருக் கிறோம். எல்லாச் சாதியிலும் சான்றோர் உண்டு என்பது குன்றின் மேலிட்ட விளக்காக விளங்கும். ஆதலால் இதனைக் கைவிட வேண்டும் என்று வலியுறுத்துகிறார்.

மானிடர்களின் நிறவேறுபாட்டைக் காட்டி, அவர்களிடையே வேற்றுமை காட்டக்கூடாது. சாதி ஏற்றத்தாழ்வு பொய்யானது. 'எல்லோரும் ஒன்று என்பது நடைமுறையானால் இன்பம் பெருக் கெடுத்தோடும். ஆகவே சாதி வேற்றுமைகளை உடைத்தெறிவீர்' என்று ஆணையிடுகிறார், புரட்சிக்கவி.

'வண்ணங்கள் வேற்றுமைப்பட்டால்—அதில்
மானுடர் வேற்றுமை யில்லை.
எண்ணங்கள் செய்கைக ளெல்லாம்—இங்கு
யாவர்க்கும் ஒன்றெனல் காணீர்!'

'சிகரென்று கொட்டு முரசே!—இந்த
நீணிலம் வாழ்பவ ரெல்லாம்;

தகரென்று கொட்டு முரசே! பொய்மைச்
சாதி வகுப்பினை யெல்லாம்:

'அன்பென்று கொட்டு முரசே! மக்கள்
அத்தனை பேரும் நிகராம்.
இன்பங்கள் யாவும் பெருகும்—இங்கு
யாவரும் ஒன்றென்று கொண்டால்'

என்று முரசு கொட்டுகிறார் கவிஞர்.

குமுகாயத்தில் காணப்படும் இழிவுகளைக் கண்டு உள்ளம் குமுறிய அவர்,

'தனி ஒருவனுக்கு உணவில்லை எனில்
ஜகத்தினை அழித்திடுவோம்'

என்று கூறுகிறார்.

பாரதியாரின் 'காணி நிலம் வேண்டும்' என்னும் பாட்டு பாரதியாரும் நம்மைப் போன்றே நீரும் நிலமும் சொத்தும் சுகமும் வேண்டுமென்று வழிபடுகிறாரே என்று நொடிப் பொழுது நினைக்கத் தோன்றும். தம்முடைய சுகத்திற்காக அல்ல. இளம்பயிர் நீரை ஏற்பது, தன்னலத்தால் மட்டுமன்று; வளர்ந்து விளைந்து பயன்படுவதற்காகவும் அதே போல் பாரதியாரும்,

............எங்கள்
கூட்டுக் களியினிலே—கவிதைகள்
கொண்டு தரவேணும்

வாழலாம்; நல்ல வண்ணம் வாழலாம்; மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்; எப்போது? இப்போதே; இப்பிறவியிலேயே.

மக்கள் இனம் இதை உணரவில்லை; வாழும் முறையைக் கற்றுக்கொள்ளவில்லை.

முல்லை, முல்லையாக மணம் பரப்புவது அதன் வாழ்வு முறை; மல்லிகை மல்லிகையாக மலர்ந்து மகிழ்விப்பது அதற்குரிய வாழ்க்கை முறை. செண்பகம் செண்பகமாகவே காட்சியளிக்க வேண்டும்; அதற்குரிய மணம் வீச வேண்டும்.

அதேபோல் மனிதன், முழுத்தன்மை செறிய வாழவேண்டும்.

'தன் பெண்டு தன் பிள்ளை' இவர்களுக்காகவே வரங்கேட்டு வரங்கேட்டுக் குறுகிப்போன மானிடத்தில் பாரதியார் கேட்கும் வரம், தென்றலாக மகிழ்விக்கிறது.

பாரதியாரின் கருத்துகள் நம் அறிவில் செறிந்தால் வாழ்க்கை ஓட்டத்தில் புதிய தெம்பும் ஒளியும் ஏற்படும்.

குமரி முதல் இமயம் வரை பரந்து கிடக்கும் நிலப்பரப்பினைத் தங்கள் தாயகமாகக் கருதி வருகின்றனர்; தமிழ்மக்கள். இன்று மட்டுமல்ல; தொன்று தொட்டே ஆயினும், பாரத மக்களிடையே சாதி, சமயத் துறைகளிலே பிரிவினை எண்ணம், பிளவு மனப் பான்மை மலிந்திருந்தன. அவற்றைக் கடிந்து மக்களையெல்லாம் நல்வழிப்படுத்திப் புதியதொரு குமுகாயத்தைப் படைக்க விரும் பினார். எதிலும் கலந்து எல்லாமாய்க் காட்சியளிக்கும் பாரதியார் தம் விநாயகர் நான்மணிமாலையில்,

*'கணக்கும் செல்வம் நூறுவயது இவையும்*
*தர நீ கடவாயே'*

என்று பாடினார். ஆம்! அவரது நூற்றாண்டு விழாவை நாம் கொண்டாடுகிறோம். குமுகாயத்தில் குற்றம் செய்கிறவர்களை அவர்தம் கவிதைகள் திசை திருப்புகின்றன. அவருடைய குமுகாய நோக்கு மாறுபட்டதாகும். அவர் ஒரு நூற்றாண்டு பெருமையுடன் வாழ்ந்துவிட்டார். பலகோடி நூற்றாண்டுகள் வாழத்தான் போகிறார். அமரத்துவம் வாய்ந்த அவர்தம் கவிதைகள் அவரை என்றும் வாழ வைக்கும்; நம்மையும் வாழ வைக்கும்.

வாழ்க பாரதி புகழ் பல்லாண்டு!

— — —

## நேர்மை வாழ வழியுண்டா?

இந்த நாடு பொதுவான மனித சமுதாயமாக இல்லை. மொழி யால் சில வேறுபாடுகள்; மதத்தால் சில வேறுபாடுகள். சாதியால் பற்பல வேறுபாடுகள் என்று பல வேறு பிளவுகளோடு காணப் படும் சமுதாயம் இது. சாதிகளை வளர்த்தவர்களே இன்று அவற் றின் தீமைகளுக்கு ஆளாகி வருந்துகிறார்கள். போதாக் குறைக்கு அரசியல் கட்சிகளும் இரண்டு மூன்றாய் நிற்காமல் பலவாய் வளர்ந்து மக்களைப் பிரிக்கின்றன. இந்த நிலையில் அவரவர்களைச் சார்ந்தவர்களுக்கு மட்டுமே உதவி செய்து முன்னேறுவது கடமை யாகக் கருதப்படுகிறது. சமுதாய அமைதிக்குத் தேவையான நேர்மை கைவிடப்படுகிறது. எதிர்காலத்தில் இதன் விளைவு எண்ணி வருந்தத்தக்கதாகும். ஆதலின் இக் குறையைப் போக்கி நேர்மை வாழவல்ல வழியை வகுத்தல் கடமையாகும்.

—டாக்டர் மு. வரதராசனார்.

# தமிழ் வளர்ச்சி மன்ற ஆண்டு விழா !

சென்னை அமைந்தகரை மாநகராட்சிப் பெண்கள் மேனிலைப் பள்ளியில் 25-4-82 அன்று மாலை 4 மணியளவில் மருத்துவமாமணி இரத்தினவேல் சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் ஆண்டு விழா நடைபெற்றது. மன்றத்தின் சார்பில் நடைபெறும் இரத்தினவேல் சுப்பிரமணியம் செந்தமிழ்க்கல்லூரியின் முதல்வர் மகாவித்துவான் பண்டித வி. நடேசனார் வரவேற்புரை நிகழ்த்தினார். மன்றச் செயலர் பேராசிரியர், இராம சுப்பிரமணியம் அவர்கள் ஆண்டறிக்கையைப் படித்தார். அடுத்து வரவு செலவு படிக்கப்பட்டு ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளப்பெற்றதோடு கீழ்க்காணும் தீர்மானங்களும் நிறைவேற்றப்பெற்றன.

(அ) தமிழக அரசு தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தையும், கோவையில் பாரதியார் பல்கலைக் கழகத்தையும், திருச்சியில் பாவேந்தர் பல்கலைக் கழகத்தையும் தோற்றுவித்தமைக்குத் தமிழக அரசுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறது.

(ஆ) தமிழ்நாட்டின் தலைநகரில் தமிழ்க்கல்லூரி தொடங்க அனுமதி தருமாறு, மன்றம் தமிழக அரசை வேண்டிக்கொள்கிறது.

(இ) பள்ளி சென்று பயில முடியாதவர்கள் வித்துவான் தேர்வு எழுத முன்பு விதியிருந்தது. அதனை இடையிலே பல்கலைக் கழகம் நிறுத்திவிட்டது. ஆனால் இந்தி, சமக்கிருதம் முதலிய மொழிகளில் தேர்வு எழுதிப் பட்டம்பெற வாய்ப்பு இருக்கிறது. தமிழுக்காகப் பாடுபடும் தமிழ் ஆட்சியில் தமிழுக்கு இடமில்லை. ஆகவே முன்போல் பள்ளிசென்று பயிலமுடியாதவர்கள் தனித்துப் படித்துப் பட்டம்பெற ஆவன செய்யவேண்டும் என்று சென்னைப் பல்கலைக் கழகத்தையும், அரசையும் இப் பேரவை பெரிதும் வேண்டுகிறது.

(ஈ) சென்னைப் பொது மருத்துவமனையில் கடந்த ஐம்பது ஆண்டுகளாய் இருந்துவந்த பாம்பன் தவத்திரு. குமரகுருதாசசாமிகள் படத்தினைக் காரணமின்றி இரு மாதங்களுக்கு முன் அகற்றியமைக்கு இப் பேரவை தனது வருத்தத்தைத் தெரிவிக்கிறது. இந்நிலையை நீடிக்கவிடாமல் விரைந்து அதனை உரிய இடத்தில் அமைத்துத் தமிழர்கள் மனத்தில் மகிழ்வு நிலவத் தமிழக அரசினையும், சிறப்பாகத் தமிழக முதலமைச்சரையும், மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சரையும் கேட்டுக்கொள்கிறது. நல்லாசிரியர் இரா. ஞானசம்பந்தன் நன்றி நவில விழா இனிது முடிவுற்றது.

———

## 'செந்தமிழ்ச் செல்வி' கட்டுரையாளர்கட்கு வேண்டுகோள்

தாள் விலை ஏற்றம், அஞ்சல் கட்டண உயர்வு இவை காரணமாகச் செல்வியில் அதிகப் பக்கங்கள் வெளியிட இயலவில்லை. எனவே, கட்டுரையாளர்களும், செய்திகள் விடுக்க விரும்புவோரும் சுருங்கிய அளவில் எழுதியனுப்புமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

ஆசிரியர்.

# வேர்ச்சொற் கட்டுரைகள்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

(முன் இதழ் ௬௦அஆம் பக்கத் தொடர்ச்சி)

## 'இல்'—துளைத்தற்கருத்து வேர்ச்சொல்

இல்—இள் = விருப்பம். இள்—இட்டம் = விருப்பம்.

"நம்பனை நாடொறு மிட்டத்தா லினிதாக நினைமினோ"

(தேவா. 20, 8).

இட்டம்—அன்பு.

"இட்டமான வியற்புக ரோனிடங் கிட்டினான்"

(கந்தபு. சுக்கிரனுப. 15)

இள்—இட்டு (இள்+து). இள்—தாக்கு, நெருக்கு, சிறி தாக்கு.

இட்டு—சிறுமை.

இட்டளம்—சிறிய இடம். இட்டு—இட்டளம். (ஒ. நோ: உப்பு—உப்பளம்).

இட்டளப்படுதல்—சிறிய இடத்தில் திரண்டு தேங்குதல்.

"சௌந்தரிய சாகரம் இட்டளப்பட்டுச் சுழித்தாற்போல"

(ஈடு. 10 : 10 : 9).

இட்டளி—சிறிய இடத்தில் திரண்டு தேங்குமாறு செய்த, ஆவியால் வெந்த உண்டி.

இட்டு + அளி—இட்டளி. அள்—அளி = செறி, சேர்.

இட்டளி என்னும் சொல் இட்டலி, இட்டிலி என்று திரிந்து வழங்குகிறது.

ம. இட்டலி; க. இட்டலி; தெ. இட்டெனா.

"புரையவிட்டலி யெள்ளுண்டை" (மச்சபு. ரச்கல்யாண. 16)

இட்டு = மாவு என்றும் பொருள் தருதலால் (இடித்தது இட்டு) இட்டினின்றும் செய்தது இட்டிலி என்னும் காரணம், இட்டலி மட்டுமன்றி மாவாற் செய்யப்படும் உண்டிவகை பல வாதலின், பொருந்தாமை உணர்க. குழியாக உள்ள தட்டில் புளித்த மாவை இட்டுச் செய்தால் 'இட்டலி' எனப் பெயர் பெற்றதாகக் கூறுவதும் சாலாது. "இடு" போன்ற ஒரு குறில்

சார்ந்த முற்றியலுகரங்கள் பெயராகும்போது பெறு—பேறு, விடு—வீடு என நெடுமுதலாகிப் பெயராவதல்லது ஒற்றிரட்டித்து ஈறுபெற்று வழங்குதலரிது. நடு—நாட்டல் என நெடுமுதலான பின் தொழிற்பெயரீறு பெறுதல் காண்க.

இடி என்னும் ஏவலே முதனிலைத் தொழிற்பெயராய் நின்று முதலாகுபெயராய் இடித்த மாவைக் குறித்து "அல்" ஈறுபெற்று இடியல், இடியாப்பம் என மாவாற் செய்த இட்டலி, இடியாப்பம் என்னும் உண்டிகளை முறையே குறித்து வழங்குதல் அறிதற் பாற்று. இடி—இட்டி—இட்டிலி எனத் திரியாது என்பதற்கு இஃது இவண் எடுத்துக்காட்டப்பட்டது.

இட்டிது—சிறியது. இட்டி—சிறுமை. சிறுமைப் பொருள் தரும் "இட்டி" இட்டிலியாயிற்று என்பதும் பொருந்தாது. ஏனெனின் "இட்டி" அளவால் மிகவும் சிறுத்திருத்தலைக் குறிக்க வேண்டும்.

ஒரு சொல்லின் வேர்ப்பொருள் காண்பாரை அச் சொல் லமைப்புப் பல்வேறு தோற்றக் காரணங்களை எண்ணுவித்துத் திசை மாற்றும்போது மரபிலக்கணக் கட்டுப்பாடும் மொழியியல் கோட்பாடுகளும் நெறிப்படுத்தி மெய்யான வேர்காண உதவும் என்பதற்கு இஃதொரு சான்றாகும்.

ஏட்டை=விருப்பம் நிறைவுறுமையின் தோன்றிய இளைப்பு மாம்.

இள்—இட்டம்=விருப்பம்.

வேட்டி வேஷ்டி ஆனதுபோல் வடமொழியாளர் ஒலிப்பில் இட்டம்—இஷ்டமாயிற்று.

த. இள்—*Skt.* ish. *E.* ask.

*Skt.* ·ish—விரும்பு, கேள். Rigveda : iḷe—I praise, iḍishe, iḍishyate, iḍitum, iḍayati, iḍ—praise.

த. ஈடு—பெருமை, புகழ். ஈட்டுரை—புகழ்மொழி, தமிழக மாலியர் (வைணவர்) நாலாயிரத் தெய்வப்பனுவலான ஈட்டுரை யைப் போற்றிக் காக்கின்றனர்.

ஈடு=பெருமை.

"ஈடுசால் போரழித்து" (சீவக. 59)

இல்—இள்—துளைத்தல், அறுத்தல், சிறிதாக்கல்.

இள்+து—இட்டு=சிறுமை.

இட்டிது—1. சிறிது. "ஆகா றளவிட்டி தாயினும்" (குறள் 478). 2. அண்மை. "இட்டி தாகவந் துரைமினோ" (தேவாரம். 1240, 2).

இட்டிமை—1. சிறுமை (திவா.). 2. ஒடுக்கம் (திருக்கோ. 149 உரை).

இட்டிய—சிறிய (ஐங்குறு. 215).

இட்டடுக்கி—சிறிய காதணிவகை.

இட்டிடை—1 சிறிய இடை. "இட்டிடையின் மின்னிப் பொலிந்து" (திருவாசக. 7, 16). க. இட்டிடெ. 2. அற்பம். "இட்டிடை யிடை தனக்கு" (கந்தபு. தெய்வயா. 183). 3. இடையூறு. "மிகுபிணி யிட்டிடை செய" (திருப்பு. 1033). 4. கடைசற்கருவியின் ஓர் உறுப்பு.

இட்டிகை—கற்களைச் செதுக்கும் கருவி (சீவக. 2689 உரை). க. இட்டிகெ கல்—செதுக்கிச் செம்மைபடுத்தப்பட்ட செங்கல்.

இட்டளம்—1. நெருக்கம். "பரமபதத்திலிட்டளமுந் தீர்ந்து" (ஈடு. 3, 8, 2). 2. வருத்தம். "அடியே னிட்டளங் கெடவே" (தேவா. 988). 3. தளர்வு (பிங்.) இட்டளர்—மனத்தடுமாற்றம் உள்ளவர். (திருநூற். 61 உரை).

க. இட்டள—எருதின் முக்காரம்.

இட்டறுதி—1. இக்கட்டான நேரம். 2. வறுமை.

இட்டறை—யானை வீழ்த்துங் குழி.

இட்டேடு—உறழ் (விவாதம்). "என்னோடே இட்டேடு கொண்டல்லது தரியாதானாய்" (ஈடு. 8, 2, 6). இட்டேடு கொள்—சொல்லுக்குச்சொல் எதிர்த்தல். "அவனுக்கு இட்டேடு கொள்ளுகைக்குப் பற்றுக இல்லாதபடி" (ஈடு. 6, 2, ப்ர.). இட்டேறு—செருக்காற் செய்யுஞ் செயல். "இட்டேறிட்டு விளையாடி" (திவ். நாய்ச். 14, 1).

இள்—இடு—குத்தல், தாழ்த்தல், வைத்தல்.

இட்டு—1. தொடங்கி. "முதலிட்டு ஐந்து பாட்டாலே (திவ். திருவாய். 2, 10, பன்னீ. ப்ர ). 2. காரணமாக. 'அதையிட்டு வந்தான்' (உ. வ.). 3. காரியமாக. கைங்கரிய சாம்ராஜ்யத்துக்கு இட்டுப் பிறந்து" (ஈடு. 9, 3, 1) 4. ஓர் அசை. 'செய்திட்டு' (உ. வ.).

இட்டுரைத்தல்—சிறப்பித்துச் சொல்லுதல். (பு. 92, 4, 10).

இட்டுக்கொடுத்தல் — ஏற்றிக்கொடுத்தல். "ஒன்றிரண்டு இட்டுக்கொடுத்த லியல்பு" (பு. வெ. 1, 17).

இட்டேற்றம்—1. பொய்க் குற்றச்சாட்டு. 'இப்படி இட்டேற்றம் பேசுவ தாகாது' (உ. வ.). 2. கொடுமை. 'ஏனிப்படி இட்டேற்றம் பண்ணுகிறாய்?' (யாழ்ப்.).

இட்டோட்டு—அலைக்கழிவு. (இழிவாக நடத்தி அலைத்தல்)

இட்டோடு—ஒற்றுமையின்மை. தாழ்வுணர்வால் தோன்றும் ஒற்றுமைக்குலைவு. 'இட்டோடு பண்ணுதல்' (W.).

(தொடரும்)

———

## தமிழ் ஆய்வரங்கம்—கருத்தரங்கு

தமிழ் ஆய்வரங்கத்தின் மூன்றாம் கருத்தரங்கு புதுச்சேரியில் 30-5-82 மாலை 6-30 மணியளவில் வணிக அவைக் கூடத்தில் திரு. புதுவை செல்வம் தலைமையில் நிகழ்ந்தது. ஆய்வரங்க அமைப்பாளர் திரு. தி. நா. அறிவுஒளி, க. மு., கல். இ., அவர்கள் எழுதிய வரலாற்றுப் புதினம் 'உணர்வுகள் அழிவதில்லை' என்னும் நூலை, புலவர்-இலக்கணச்சுடர் திரு. இரா. திருமுருகன்., க. மு., கல். மு., அவர்கள் நனி சீரிய முறையில் திறனாய்ந்துரைத்தார். ஆங்கிலப் பேராசிரியர். திரு. இராசா, க. மு., அவர்கள் 'ஆனந்த ரங்கம்பிள்ளை நாட்குறிப்பு ஓர் அறிமுகம்' என்னும் தலைப்பில் ஆய்வுரையாற்றினார். பாவலர் திரு. கை. திருநாவுக்கரசு அவர்கள் கற்பனை நயமார்ந்த இலக்கியப்பாடலை அரங்கேற்றினார். திரு. ஆ. அரிமாப் பாமகன்., க. மு., அவர்கள் நகைச்சுவைக் கதை படித்தார். திரு தி. நா. அறிவுஒளி அவர்கள் திறனாய்வுக்கு நன்றிகூறி அறிஞர்களைப் பாராட்டினார். பேராசிரியர்கள், பிரெஞ்சுமொழியறிஞர்கள், தமிழ்ப் புலவர்கள், சான்றோர்கள், தமிழ் அமைப்புகளின் பொறுப்பாளர்கள், ஆராய்ச்சியாளர்கள் குழுமியிருந்தனர். 'வினா நேரத்தில்' படைப்புகளையொட்டிய இலக்கண, வரலாற்றுப் புதின, இலக்கியச் சொல்லாய்வு வினாக்களை அவையோர் தொடுத்தனர். அறிஞர் தக்க விடை கொடுத்தனர். திரு. வல்லவன் அனைவரையும் வரவேற்றார்.

# செய்திகளும் குறிப்புகளும்

## பாவாணர் சொல்லாய்வுக் கருத்தரங்கு

பாவாணர் விட்டுச்சென்ற அகரமுதலிப் பணியைத் தொடர்ந்து விரைவூட்டும் வகையில் அவர் வகுத்த நெறிமுறைகளைத் தெளிவுபடுத்தி, அத்துறையினரால் சொல்விளக்கம் தரப்பட்ட சொல்லாய்வுகளை அறிஞரிடைக் கலந்தாய மாதந்தோறும் சொல்லாய்வுக் கருத்தரங்கம் நடைபெற்று வருகிறது. அவ்வகையில் 1—6—82 அன்று மாலை. மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மெ. சுந்தரம் அவர்கள் தலைமையில் 'ஆய்' 'ஆள்' என்னும் சொற்கள்பற்றிய கருத்தரங்கு நடைபெற்றது.

"பாவாணரின் மொழிநூல் முடிவுகளும் மேலைநாட்டார் மொழி நூற் கருத்துகளும்'' என்னும் பொருள்பற்றிப் பொறுப்பு இயக்குநர் இம்மாதம் தொடர் சொற்பொழிவாற்றுவார்.

## பாராட்டுகிறோம்

அனைத்திந்திய வானொலியில் கடந்தசில நாள்களாக 'ஆகாஷ்வாணி' என்ற ஒலி கேட்டுக்கொண்டிருந்தது. இதனை விரும்பாத திராவிட இயக்கத்தாரும், தமிழ்ப் பற்றுடைய பிறரும் தமது எதிர்ப்பினை நடுவண் அரசுக்குத் தெரிவித்தனர். கலைஞர் கருணாநிதி அவர்களும் 'ஆகாஷ் வாணி'யால் வரும் விளைவுகளை விளக்கித் தலைமை அமைச்சருக்குக் கடிதம் எழுதினர். தமிழ்மக்களின் ஒருமனப்பட்ட இத்தகைய எதிர்ப்பினை உணர்ந்து திருமதி இந்திராகாந்தி அவர்கள், ஆகாஷ்வாணியை விலக்கி 'வானொலி' எனக் கூற ஆணை பிறப்பித்துள்ளார்கள். தமிழர்களின் உணர்ச்சிக்கு மதிப்புத்தந்து ஆணை பிறப்பித்த தலைமை அமைச்சர் அவர்களைப் பாராட்டுவதோடு நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

## பண்டிதமணி அவர்களின் நூற்றாண்டு நிறைவு விழா

மகாமகோபாத்தியாய பண்டிதமணி கதிரேசனார் அவர்களின் நூற்றாண்டு நிறைவு விழா 21—5—82இல் தமிழ்நாடு அரசின் சார்பில், சென்னைக் கலைவாணர் அரங்கில் முனைவர் ம பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாண்புமிகு நிதியமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் நிறைவுரையாற்றினார். செட்டிநாட்டரசர் முனைவர் இராசா சர் முத்தையா செட்டியார் கதிரேசனார் படத்தைத் திறந்துவைத்தார். மற்றும் பேராசிரியர்களும் அறிஞர் பலரும் சிறப்புரை ஆற்றினர்.

## வானதி பதிப்பக வெள்ளி விழா

வானதி பதிப்பகத்தின் வெள்ளி விழா 22—5—'82இல் மயிலை ஏ. வி. எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடை

பெற்றது. நீதிபதி உயர்திரு. என். கிருட்டிணசாமி ரெட்டியார் காலை நிகழ்ச்சிகளுக்கும் மாண்புமிகு அமைச்சர் ஆர். எம் வீரப்பன் அவர்கள் மாலை நிகழ்ச்சிகளுக்கும் தலைமைதாங்கினர். கிருபானந்தவாரியார், செட்டிநாட்டரசர் டாக்டர் ராசா சர் முத்தையா செட்டியார், முனைவர் ம. பொ. சிவஞானம், தொழிலதிபர் நா. மகாலிங்கம் நீதிபதி மு. மு. இசுமாயில், நீதிபதி ச. மோகன், முன்னாள் துணை வேந்தர் கெ. தி. சுந்தரவடிவேலு மற்றும் அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர்.

## ஒய். எம். ஐ. ஏ. தமிழ்ப் பேரவை நடத்தும் திருக்குறள் வகுப்புகள்

சென்னை ஒய் எம். ஐ. ஏ. தமிழ்ப் பேரவையின் சார்பில் அரண் மனைக்காரத் தெரு, 66 எண்ணுள்ள கட்டடத்தில் 31 5 82 முதல் திங்கட்கிழமை தோறும் மாலை 6 மணி அளவில் திருக்குறள் வகுப்புகள் நடைபெறும். ஓய்வுபெற்ற மேல்வழக்குரை துணை ஆணையர் (Appellate Assistant Commissioner C. T. Rtd.) அவர்கள் வகுப்புகளை நடத்துவார்.

## தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்குத் திரு. பி. எல். சாமி அவர்கள் வழங்கிய நன்கொடைகள்

பாண்டிச்சேரி வருவாய்த் துறைச் செயலாளரும் மாவட்ட ஆட்சித் தலைவருமான திரு. பி. எல். சாமி அவர்கள் தமிழ்ப் பல்கலை கழகத் துணை வேந்தர் அவர்களிடம் 20 5—82 அன்று அரிய நாணயங்களைக் கண்காட்சியில் வைப்பதற்காக வழங்கினார்கள் மறைந்த அவருடைய உடன்பிறப்பாளரும் ஆராய்ச்சியாளருமான திரு. பி ஜோசப் அவர் களின் பரிசாக அந்த நாணயங்களைக் காட்சிக்கு வைக்கலாம் எனவும் திரு. பி. எல். சாமி அவர்கள் கேட்டுக்கொண்டார்கள்.

### பிற நன்கொடைகள்

திருநெல்வேலி இந்துக் கல்லூரி முன்னாள் முதல்வர், திரு. கே. எஸ். கணபதி அவர்கள் அச்சிட்ட அரிய புத்தகங்களையும் மற்றும் 300 ஓலைச் சுவடிகளையும் தமிழ்ப் பல்கலைக் கழக நூலகத்திற்கு வழங்கினார்கள்.

வட ஆர்க்காடு மாவட்டம், ஒடுக்கத்தூர் திரு. பி. அ. வேதவியாசர் அவர்கள் தமது தந்தை பெயரால் ஆறு பனை ஓலைச்சுவடிகளைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு அளித்துள்ளார்கள்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-ருசு, சஙஉ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரு. 10-00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | விசாக நம்பி அவர்கள், சென்னை | 10—00 |

# மதிப்புரை

## மதுரை நான்காம் தமிழ்ச் சங்கம்

[ஆசிரியர். புலவர் இரா. இளங்குமரன், மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு. பக்கங்கள், 160. விலை ரூ. 7].

"பூவெனப் படுவது பொறிவாழ் பூவே." தமிழ்ச் சங்கம் என்றாலே மதுரைத் தமிழ்ச் சங்கத்தைக் குறிக்கும். முதல், இடை, கடைச் சங்கங்களுக்குப் பிறகு தமிழ் மதுரையில் பாண்டித்துரைத் தேவர் நன்முயற்சியால் எண்பது ஆண்டுகட்கு முன் தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டது. தலை சிறந்த தமிழறிஞர் இச் சங்கத்தை நான்காம் தமிழ்ச் சங்கம் என்று வாழ்த்தி வரவேற்றனர். இதன் வரலாற்றை எளிய, இனிய தமிழில் ஆசிரியர் எழுதியுள்ளார். பதின்மூன்று இயல்களைக் கொண்ட நூலில் முதல் மூன்று பிரிவுகளில் தமிழ், பழந்தமிழ்ச் சங்கங்கள், செந்தமிழ் வளர்த்த தேவர்கள் என்பவை இடம் பெற்றுள்ளன. தமிழ்ச் சங்கத் தோற்றமும் பணித்திறமும் என்ற பகுதியில் சங்கத்தின் 'செயல் முறைகளையெல்லாம் ஆர்வமீதூர உன்னிப்பாக நோக்கிவந்த பெருமகனார் உ. வே. சாமிநாதையரின் உரை காணப்படுகிறது (1905). "இதுவரையில் வெளிப்படாத அரிய, பெரிய செய்திகள் பல வெளிவந்திருந்தலும் செந்தமிழ் என்னும் பத்திரிகையைப் பெற்றுவரும் அன்பர்களுக்கு நன்கு புலப்படும். எத்தனையோ பலர் சேர்ந்து செய்யவேண்டிய இப் பெருங்காரியத்தை ஏகதேசத்தில் வைத்துச் செலவு செய்து பரிபாலித்து வருபவர்களும் பாலவனத்தம் ஜமீந்தாரும் தமிழ்ச் சங்கத்து அக்கிராசனாதிபதியுமாகிய இராமநாதபுரம் மகா-ா-ா-ஸ்ரீ பாண்டித் துரைஸாமித் தேவரவர்களுடைய பெருந்தகைமை பாராட்டற்பாலது."

ஆய்வும் அரங்கேற்றமும், கல்விக் குழுவின் பணிநலம் என்ற இரண்டு அதிகாரங்களில் சர் ஜகதீச சந்திரபோஸ் அவர்களுக்கு மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பதினொன்றாம் ஆண்டு விழாவில் அளித்த வரவேற்புப் பற்றிய செய்தி கிடைக்கிறது.

மூன்று அதிகாரங்களில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் அரிய பணிகள் உரைக்கப்படுகின்றன. ஒரு மாமணி' என்ற தலைப்பில் பாண்டித்துரைத்தேவரின் குணநலன் பற்றி ஆசிரியர் சொல்வதாவது: "நாட்டுப் பற்றையும் மொழிப்பற்றையும் சீரிய நிலையில் இணைத்துத் தனித்தனியே சிதறிப் போகாமல் ஓர் அமைப்பாக ஆக்கி வளர்த்துப் போற்றிக் காத்த புகழாளர் பாண்டித்துரையே ஆவர். ஆகலின், அவர்தம் விரிந்த எதிர்கால வளமிக்க பார்வை எவரினும் உயர்ந்து செல்வதாயிற்று, இன்ன பிறவற்றையெல்லாம் எண்ணுங்கால் 'பொன்' தந்த

'பாண்டி' மணிகளுள் மணியாய் 'ஒருமா மணியாய் ஓங்கிய திருமாமணி' என்பது தகும்.

'மதுரைத் தமிழ்ச் சங்கம் நான்காம் தமிழச் சங்கம் அன்று' என்று குறுகிய நோக்குள்ள சிலர் தீயூழ்காரணமாய்ச் சொல்லிவருவதை ஆசிரியர் நான்காம் தமிழ்ச் சங்கம் என்ற தலைப்பில் ஆராய்கிறார். சேது சமஸ்தான மகாவித்துவான் ரா. இராகவையங்கார் புவியெழுப்தில் நில மென்னும் நல்லாள் தன்னை அகழ்ந்த மனிதனைப் பார்த்து 'உன்னைப் பெற்றிலன் உண் என ஊட்டுதாய் உறழ'ச் சொல்கின்றுளாம். மதுரைச் சங்கம் தமிழர்க்கு ஆற்றிய பணி அத்தகையது. பாண்டித்துரைத்தேவர் என்ற சான்றோர் பயன் கருதாது செய்த தொண்டைக் குறை கூறுவது அறிஞர்க்கு அழகாமோ?

மதுரைத் தமிழ்ச்சங்க நூல்கள் 'சங்கப் பிரசுரம்' என்றும் 'செந் தமிழ்ப் பிரசுரம்' என்றும் வெளிவந்தன. சங்கம் வெளியிட்ட நூல் களின் பட்டியலையும் முன் வந்த தமிழ்ச்சங்க வெளியீடுகளில் இருக் கின்றபடி இந்த வெளியீட்டிலும் கொடுத்திருக்கலாம். மதுரைத் தமிழ்ச் சங்கம் வணிக நிறுவனமன்று. அடக்க விலையில் நூல்களை யளிப்பது மதுரைச் தமிழ்ச் சங்கம் கடைப்பிடித்த கொள்கையாகும். எனவே நூலின் விலை ரூ. 7/-என்பது கூடுதலாகும்.

இச் சிறிய அளவு நூல் ஆசிரியரின் சீரிய தமிழ்ப் பணி. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் வரலாறு விரிவாக எழுதுவதற்கு இதை ஒரு முன்னோடி எனக் கொள்ளலாம்.

க. சி. கமலையா.

## திருக்குறள் நொடி வினு—விடை

[ஆசிரியர்: பன்மொழிப் புலவர் மு. ச. சிவம், க. மு. இலக். வல்., மொ. பட்., மீரா நிலையம், 35, பாப்பாத்திக்காடு முதல் தெரு, ஈரோடு-4. விலை: ரூ. 10-00]

'வினுதல், வினுவிய விடுத்தல்' என்பது கல்வி பயிலும் முறையில் முன்னோர் வகுத்த இலக்கணம். எதையும் வினுவி அறியும்போது விளக்கம் கிடைக்கிறது. அவ்வகையில் திருக்குறளை நன்கு பயிலுதற்கு வழிகாட்டும் நூலே "திருக்குறள் நொடி வினுவிடை" என்னும் இந் நூலாகும். ஏன்? எப்படி? எது? என்னும் வினுக்களை விடுத்தே 1523 கருத்துகளைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் இந் நூலாசிரியர் முயற்சி பாராட்டத்தக்கது.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

கழகக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| தமிழ்ச் சுரங்கம் திரு. வி. க. — எஸ். ராஜலட்சுமி | 7 | 00 |
| நீதியின் தேரோட்டம்—நீதிபதி ச மோகன் | 10 | 00 |
| பாஞ்சாலி சபதம் —பி எஸ் ராமையா | 6 | 00 |
| அக்கரைச் சீமையில் ஆறு வாரங்கள் — எஸ். திருநாவுக்கரசு | 7 | 50 |
| புதுமைப்பித்தன்—முல்லை முத்தையா | 5 | 00 |
| ஜலதரங்கம்—பி. பாலசுந்தரம், எம்.ஏ. | 7 | 50 |
| ஆயுதபூசை—ஜெயகாந்தன் | 3 | 75 |
| சேற்றில் மனிதர்கள் ராஜம் கிருஷ்ணன் | 14 | 00 |
| தவம்—திருமுருக கிருபானந்தவாரியார் | 3 | 00 |
| மனோபலமே வாழ்வின் நலம்—மெர்வின் | 7 | 00 |
| ஈழத்திலிருந்து ஓர் இலக்கியக் குரல்—டொமனிக் ஜீவா | 10 | 50 |
| பாரதியார் இதயம்—டி வி. எஸ். மணி | 8 | 00 |
| இளமையோடிருப்பது எப்படி? சம்பந்தம் | 3 | 50 |
| தேசியக்கவி—பி. எல் ராஜேந்திரன் | 9 | 00 |
| நான்கண்ட நாடுகள்—க. இராசாராம் | 12 | 00 |
| நாட்டுப்புறப் பாடல்கள்—டாக்டர் மெ. சுந்தரம் | 30 | 00 |
| வள்ளியப்பா ஒரு வழிகாட்டி —கவிஞர் க தி கணேசன் | 15 | 00 |
| அசத்திணை மாந்தர் டாக்டர் ஆ. இராமகிருட்டிணன் | 25 | 00 |
| டாக்டர் உ வே. சா. — டாக்டர் பூ சொல்விளங்கும் பெருமாள் | 20 | 00 |
| புனிதக் கோயில்களும் புண்ணிய தீர்த்தங்களும் —புலவர் சி முத்துப்பிள்ளை | 2 | 50 |
| பாரதிதாசன்-ஒருநோக்கு டாக்டர் ச. சு. இளங்கோ | 15 | 00 |
| தென்றல் — அருண்மொழி | 6 | 00 |
| மொழி வளர்ச்சி — டாக்டர் கி. கருணாகரன் | 12 | 00 |
| குடி அரசு இதழில் பாரதிதாசன் பாடல்கள் —டாக்டர் ச. சு. இளங்கோ | 5 | 00 |
| அங்கயற்கண்ணி அணிமாலை கவிஞர் கோகபென், பி.காம். | 5 | 00 |
| சிலம்பின் முதல் ஒலி—டாக்டர் வெ சு. அழகப்பன் | 6 | 00 |
| கலைந்த கனவு—வி சா. பாலசுப்பிரமணியன் | 10 | 00 |
| நவதந்திரக் கதைகள்—மகாகவி பாரதியார் | 4 | 50 |
| மகாகவி பாரதியாரின் சந்திரிகையின் கதை —சீனி விசுவநாதன், டி. வி. எஸ். மணி | 6 | 00 |
| பாரதி வாழ்வும் வாக்கும்—சு. இராமசாமி | 4 | 80 |
| பாரதியாரின் சுவையான அநுபவங்கள் —தேவகோட்டை பி. நாராயணன் | 5 | 50 |

# கழகப் புதிய வெளியீடுகள்

## கழக ஆட்சியர் வ. சு. வரலாறு

ஆசிரியர்: கழக இலக்கியச் செம்மல்

புலவர் இரா. இளங்குமரன்.

அறுபது ஆண்டுகள் அருந்தமிழ்ப் பணியாற்றி, ஆயிரத்துக்கு மேற்பட்ட நூல்களைத் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக வெளியிட்டவரும், புலவர்களைப் புரந்து போற்றிப் புகழ்பெறச் செய்தவரும், முத்தமிழ் ஆக்கும் பணியில் முந்திநின்று, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் போன்றோரால் பாராட்டப்பெற்றவரும், தாமரைச் செல்வர், செந்தமிழ்ச் செல்வர், தமிழ்ப் பேரவைச் செம்மல் என்னும் பட்டங்களைப் பெற்றுப் பார்புகழ வாழ்பவரும், அறநிலயங்கள் பல நிறுவி அறப்பணியாற்றிவரும் அறச்செல்வரும் ஆகிய கழக ஆட்சியர் வ சுப்பையா பிள்ளை அவர்களின் வாழ்வாங்கு வாழும் வாழ்க்கையினை வளம்பட உரைக்கும் வரலாற்று நூல். 350 பக்கங்கள்-அழகிய பதிப்பு. விலை ரூ 1௦ 00

## ஆவணங்களும் பதிவு முறையும் (திருந்திய பதிப்பு)

ஆசிரியர்: செ முத்துவீராசாமி நாயுடு, பி ஏ.,

(ஓய்வுபெற்ற மாவட்ட ஆவணப் பதிவாளர்)

வீடு, மனைகளை விற்றல், வாங்கல், இறுதிமுறி, விருப்ப ஆவணங்கள், பதிவுத் திருமணம், குத்தகை ஆவணம் வாடகை ஆவணம், பட்டா மாற்றல் ஆகியன போன்ற ஆவணங்களை எப்படி? எங்குப் பதிவு செய்தல்; இவற்றுக்குரிய கட்டணங்கள் எவ்வளவு என்பனபோன்ற செய்திகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமா? அப்படியானால் இப் புத்தகத்தைப் படியுங்கள். விலை ரூ. 16 50

## கெடிலவளம்–ஆசிரியர்: பேராசிரியர் சுந்தரசண்முகனார்

முன்னர்க் கெடிலக்கரை நாகரிகம் என்னும் அரிய பெரிய நூலை எழுதிய இந்நூலாசிரியர், அதன் வழிநூலாக இதனை உருவாக்கியுள்ளார். இதில் கெடில ஆற்றின் தோற்றம் அதன் வளம், கெடிலக்கரை ஊர்கள், பெருமக்கள், நாகரிகம் இன்ன பிற சுருங்கச்சொல்லி விளங்கவைக்கப்படுகின்றன. சுருங்கச் சொல்ல வேண்டுமானால் தென்னார்க்காடு மாவட்டத்தின் வரலாற்றினை அரிய இந்நூல் பெரிதும் பயன்படும். நூலகங்கள் தோறும் இருக்கவேண்டிய வரலாற்று நூல் விலை ரூ. 7 00

## எலும்புப் பாதுகாப்பு–டாக்டர் எம். சி. இராசமாணிக்கம்,

M B.B.S., M S. (General)., M.S (ortho), M. A. M.S. (ortho), F.I.C.S., F.R S.H (London)

விலை ரூ 12 00

## இஸ்லாமும் தமிழும்–பேராசிரியர் அப்துல் கறீம், எம்.ஏ.,

தமிழ்த்துறைத் தலைவர், காதிர் முகைதீன் கல்லூரி, அதிராம்பட்டினம். விலை ரூ. 16 00